# பொருளடக்கம்

கணபதி துணை

# முகவுரை

மணிமேகலை யென்பது தமிழ் மொழியிற் புகழ் பெற்று விளங்கும் பழைய காப்பியங்கள் ஐந்தனுள் ஒன்று. சிலப்பதிகாரக் கதாநாயகனான கோவலனென்னும் வணிகனுடைய காதற் பரத்தையாகிய மாதவியின் புத்திரியாவாள் மணிமேகலை யென்பவள். துறவுபூண்ட இவளுடைய சரித்திரமாகிய மணிமேகலை யென்னும் நூல் மதுரைச் சீத்தலைச் சாத்தனாரென்னும் கவிஞர் பெருமானால் அகவற்பாக்களால் ௩௦-காதைகளாக இயற்றப் பெற்றது. அதனை ஆதாரமாகக் கொண்டு மணிமேகலைக் கதைச் சுருக்கம் என்னும் இவ்வசன நூலை எழுதலானேன்.

பௌத்த சமயக் கொள்கைகள் பல இதிற் காணப் படும். அக்காலத்து வழிபடப்பெற்று வந்த தெய்வங்கள் இன்னவையென்பதும், தமிழ்நாட்டின் பழைய இராச தானிகளாகிய காவிரிப்பூம்பட்டினம் மதுரை வஞ்சி காஞ்சி முதலிய நகரங்களின் அமைப்பும், அவற்றை யாண்ட அரசர்களின் செங்கோல் முறையும், பல சாதி யார்களின் இயல்பும், கைத்தொழில் வகையும், கற்பின்

மேம்பாடும், பலவகையான தருமங்களும், அன்னதானத்தின் பெருமையும், இவைபோல்வன பிறவும் இதனால் அறியலாகும்.

முதனூலிலிருந்து சுவை பயப்பனவும் எளிய நடையாகவுள்ளனவுமான நல்ல பாகங்களை உரிய இடங்களில் இக்கதைச் சுருக்கத்தினிடையே அமைத்திருக்கிறேன். எல்லோரும் எளிதில் படித்தறிந்து இன்புறும்படி இப்பதிப்பில் வசன நடை இயன்றவரை மாற்றி முன்பிருந்ததைக் காட்டிலும் சுலபமாக எழுதப்பட்டுள்ளது.

படிப்பவர்களுக்கு உபயோகமாக இருக்கும்பொருட்டு அரும்பதம் முதலியவற்றின் அகராதியையும் சிறப்புப் பெயர்களின் விளக்கத்தையும் எழுதிச் சேர்த்திருக்கிறேன்.

சென்னை,<br>24-4-'41.

இங்ஙனம்,<br>வே. சாமிநாதையர்.

உ

பரம்பதி துணை

# மணிமேகலைக் கதைச் சுருக்கம்

(வெண்பா)

" படிக நிறமும் பவளச்செவ் வாயும்
கடிகமழ்செந் தாமரைபோற் கண்ணும்—துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி."

## க.—விழாவறை காதை

**ப**ண்டைக் காலத்திலே அகத்திய முனிவர் காவிரிப்பூம் பட்டினத்தை வளமுறச் செய்வித்தற்கு நினைந்தனர்; அவருடைய கட்டளையின்படியே தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியனென்னும் சோழன் இந்திரனை வணங்கிக் குறையிரந்து அவனது அனுமதி பெற்று இருபத்தெட்டுநாள் அந்நகரில் ஒரு விழா நடத்தினன். பிற்காலங்களிலும் அவன் பரம்பரையோரால் ஆண்டுதோறும் அவ்விழா அவ்வாறே நடத்தப்பெற்று வந்தது.

அவ்விழாவை நடத்தக் கருதிய அந்நகரத்துள்ள பல சமய வாதிகளும் பிறரும் ஒருங்கு கூடி,

"இந்திரவிழா நடத்துவதை நாம் மறந்தால் முசுகுந்தனது துயரை ஒரு காலத்திற் போக்கிய நாளங்காடிப் பூதம் துன்பம் செய்யும்; பாவிகளைப் புடைத்து உண்ணும் சதுக்கப்பூதம் இந்நகரை விட்டு நீங்கும்; ஆதலால் இவ்விழாவை நடத்துவோமாக" என்று தம்முள் நிச்சயித்துக்கொண்டு அவ்விழா நடக்கப்போதலை நகரத்தாருக்கு அறிவிக்கும்படி முரசறைவோனுக்குச் சொன்னார்கள். அவன் இந்திரனது வச்சிராயுதமுள்ள கோயிலாகிய வச்சிரக் கோட்டத்தில் இருந்த முரசை யானையின் பிடரில் ஏற்றி முதலில் ஊரை வாழ்த்தி, "மேகம் மாதந்தோறும் மும்மழை பொழிக; அரசன் செங்கோலினனாகுக; அறிஞர்களே, இந்திரவிழா நடக்குங்காலத்திற் சுவர்க்க லோகம் வறிதாகும்படி எல்லாத் தேவரும் அதனை நீங்கி இங்கே எழுந்தருளுவர்; இது பெரியோர்களுடைய துணிபு. ஆதலால், வீதி முதலியவற்றிற் பூரணகும்பங்கள், பொற்பாலிகைகள், பாவை விளக்குகள் ஆகிய இவற்றைப் பரவ வைத்திடுங்கள்; குலைக்கமுகு, குலைவாழை, கரும்பு, வஞ்சிக்கொடி, பூங்கொடி ஆகிய இவற்றைக் கட்ட வேண்டிய இடங்களிற் கட்டுங்கள்; தூண்களில் முத்துமாலைகளை நாற்றுங்கள்; வீதிகளிலும் மன்றங்களிலும் பழமணலை நீக்கிப் புதுமணலைப் பரப்புங்கள்; துகிற்கொடிவகைகளை மாடங்களிலும் வாயில்களிலும் கட்டுங்கள். சிவபெருமான் முதல் சதுக்கப்பூதம் இறுதியாகிய தெய்வங்கள் உறையும் கோயில்களிற் செய்யவேண்டிய காரியங்

களை முறையாகச் செய்யுங்கள். தருமோபதேசம் செய்ய அறிந்தவர்களே, பந்தரிலும் அம்பலங்களி லும் சென்று பிரசங்கம் புரியுங்கள். சமயவாதி களே, வித்தியாமண்டபத்தை அடைந்து இருத்தற் குரிய இடத்திலிருந்து வாதம் புரியுங்கள்; யாரிடத் தும் பகைமையும் கோபமும் கொள்ள வேண்டாம்" என்று கூறி முரசறைந்து இந்திரவிழாவைத் தெரி வித்தான்.

## உ.—ஊரலர் உரைத்த காதை

பின்பு, காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நடைபெற்றது. அவ்விழாக்காலத்திற் பண்டை வழக்கப்படியே அரங்கில் ஆடும்பொருட்டு நாடகக் கணிகையாகிய மாதவியும் அவள் மகள் மணிமேகலை யும் வரவில்லை. அதனால் மாதவியின் தாயாகிய சித்திராபதி மனம் நொந்து தன் தோழியாகிய வயந்தமாலையை அழைத்து, "நீ மாதவிபாற் சென்று விழாவிற்கு அவள் வாராதிருத்தல் பற்றி இவ்வூரார் கூறும் பழிமொழியை அவளுக்குச் சொல்லி வா" என்று அனுப்பினாள். அவள் அங் ஙனமே சென்று மணிமேகலையோடு மாதவியிருந்த மலர்மண்டபத்தை அடைந்தாள். அங்கே தவத் தால் வாடிய மாதவியின் உடம்பைக் கண்டு வருத்த முற்று அவளை நோக்கி, "நீ உன் மகளுடன் இந்திர விழாவிற்கு வாராமலும், உன் மரபிற்கு ஒவ்வாத தவவொழுக்கம் பூண்டும் இருத்தல் பற்றி ஊரார்

புறத்தே பூப்பறித்தற்குத் தனியே அனுப்பலாகாது. இந்நகரத்தில் யான் வந்ததற்குரிய காரணம் கூறுவேன்; கேட்பாயாக: யான் உஞ்சை நகரத்துள்ள கௌசிகனென்னும் ஓர் அந்தணனுடைய மகள்; ஒருநாள் தனியே செல்லுதற்கு அஞ்சாமல் ஆராய்ச்சியின்றி ஒரு சோலையிற் சென்று பூப் பறித்தேன். அப்பொழுது இந்திர விழாவைக் காண்பதற்கு இந்நகரை நோக்கி ஆகாய வழியே வந்த மாருதவேகனென்னும் வித்தியாதர னொருவன் என்னைக் கண்டு உடனே எடுத்துக்கொண்டு மேலே சென்று, தன் வயமாக்கிச் சிலநாள் வைத்திருந்தான்; பின்பு இந்நகரத்தே என்னை விட்டு விட்டு நீங்கித் தன் நகரம் போயினன். மகளிர் தனியே செல்லுதலால் உண்டாகும் தீங்கு இத்தன்மையது. ஆதலால், மணிமேகலை தனியே போய்ச் சோலையிற் பூப்பறித்தல் தவறாகும். யாரேனும் துணையாக இவளுடன் செல்லவேண்டும். இலவந்திகைச் சோலையின்கண் அரசனுடைய பக்கத்திலுள்ளார் பலர் இருப்பர். உய்யானமென்றாலோ அதில் தேவர்களாலன்றி மனிதர்களால் விரும்பப் படாதனவும் வண்டுகள் மொய்க்கப் பெறாதனவு மான மலர்களையுடைய மரங்களெல்லாம் வாடாத பூமாலைகளைத் தாங்கி நிற்கும். ஆதலால், அவ்வனம் கையிலே பாசத்தையுடைய பூதங்களாற் காக்கப் படும் என்று நினைத்து அவ்வனத்தை அறிவுடையோர் அடையார். சூரிய கிரணத்தாற் சிறையிழந்த சம்பாதியிருந்த சம்பாதி வனமும், காவிரியின்

தந்தையாகிய குபேரனிருந்த குபேரவனமும் மிக்க முதுமையையுடையனவும் தீண்டி வருத்துவனவுமாகிய தெய்வங்களாற் காக்கப்படுதலின் அவற்றினிடத்தும் அறிவுடையோர் செல்லார்.

> அருளு மன்பு மாருயி ரோம்பும்
> ஒருபெரும் பூட்கையு மொழியா நோன்பிற் [illegible]
> பகவன தாணையிற் பன்மரம் பூக்கும் (௫௯-௯௧)

உவவனமென்று ஒருவனம் உண்டு. அதில் தன்னகத்துள்ளோருடைய ஓசையை வெளிப்படுத்தாமல் அவர்கள் உருவங்களை மட்டும் வெளிப்படுத்துவதாகிய பளிக்குமண்டபம் ஒன்று உள்ளது. அதனுள்ளே மாணிக்கச் சோதி பரந்த ஒரு பதுமபீடம் இருக்கிறது. அப்பீடத்தில் அரும்புகளை இட்டால் அவை மலரும். பல வருடம் சென்றாலும் அதில் இட்ட மலர்கள் வாடா; அம்மலர்களில் வண்டுகள் மொய்யா. இதுகாறும் அதன் பெருமையை உனக்குச்சொல்ல மறந்தேன்; கேட்பாயாக: ஒரு தெய்வத்தை நினைந்தோர் அத்தெய்வத்தின் அடிகளைத் தியானித்து மலர்களை அப்பீடத்திற் சேர்த்தால் அம்மலர்கள் அப்பீடத்தை விட்டு நீங்கி அத்தெய்வத்தின் அடிகளிடத்தே செல்லாநிற்கும். யாதொரு நினைப்புமின்றி அவற்றை அப்பீடத்தே சேர்ப்பின் அவைகள் அதனைவிட்டு நீங்கா. இதற்குக் காரணம் சொல்லுவேன்: 'செய்யும் கருமங்கள் மனத்தோடு கூடாதவிடத்தும் அவைகள் பலிக்கும்' என்னும் கொள்கையுடையோர் துன்பமடையவும், 'மனத்

தோடு கூடாதவழிக் கருமங்கள் பலியா' என் போர்க்கு உதாரணமாயிருக்கவும் மலரை இட்டுக் காட்டுவதற்கு மயனென்னும் தெய்வத்தச்சனல் அப்பீடம் நிருமிக்கப் பட்டதாகும். அவ்வனத்தி லன்றி உன் மகள் வேறு வனங்களிற் செல்லுதற்கு உரியளல்லள். அவளோடு பூப்பறித்தற்கு நானும் துணையாகச் செல்வேன்" என்று சொல்லிவிட்டு மணிமேகலையோடு சேர்ந்து அவள் போயினள். அப்பொழுது தெருவிலே பலவகையான காட்சி களை அவர்கள் கண்டனர். உண்ணுநோன்பியான ஒருவனைத் தொடர்ந்து நின்று, "ஐய, இதனை உண் ணும்; உண்டால் காற்றுப் புகாத அறையிற் புகுந்த வரைப்போல அழுக்குடைய உடம்பிற் புகுந்து வருந்திக்கொண்டிருக்கும் உம்முடைய உயிர் அவ் வருத்தமொழிந்து மிக்க இன்பத்தை அடையா நிற் கும். ஆதலால், இதனையுண்டு தெளிக" என்று கள்ளையுண்ணும்படி ஒரு கட்குடியன் வற்புறுத்திக் கூற, அவன் பின்னே சில சனங்கள் வியப்புற்றுச் சென்றனர். ஒரு பித்தனுடைய பலவகைப்பட்ட விகாரச் செயல்களைக் கண்டு சிலர் வருந்தி நின்ற னர். பேடென்னும் கூத்தைக் கண்டு சில சனங்கள் நின்றனர். தெருவின் இருபுறத்திலுமுள்ள மாளிகை களில் எழுதப்பட்டுள்ள சித்திரங்களைக்கண்டு சிலர் வியந்து நின்றனர். சிறு தேரின்மீது செய்துவைக் கப்பட்டுள்ள யானையின்மேற் சிறுவர்களை யேற்றி மகளிர் பாராட்டுதலைக் கண்டு நின்றனர் சிலர். இவ் வாறு நின்ற எல்லோரும் முன்னம் விராடநகரத்

திற் பேடிவடிவங்கொண்டு சென்ற அருச்சுனனைக் கண்டு வியந்து சூழ்ந்து கொண்டவர்களைப்போல மணிமேகலையைச் சூழ்ந்துகொண்டு, "மிக்க அழகை யுடைய இவளைத் தவவழியிற் புகுத்திய இவள் தாய் மிகவும் கொடியவள்; இவள் பூப்பறித்தற்குச் சோலை யிற் புகுவாளாயின், ஆங்குள்ள அன்னப்பறவை கள் முதலியன இவள் நடைமுதலியவற்றைக் கண்டு என்ன பாடுபடா?" என்று இவை போல்வனவற் றைச் சொல்லி அவளுடைய அழகைப் பாராட்டி மிகவும் வருந்தி நின்றனர். [சுதமதியோடு மணி மேகலை மெல்லச் சென்று உவவனத்தில் மலர் கொய்தற்குப் புகுந்தாள்.]

## ௪.—பளிக்கறை புக்க காதை

[அப்பால் மணிமேகலை அச்சோலையின் வளங் களையும் ஆங்குள்ள பொய்கையின் அழகையும் சுதமதி காட்டக் காண்பாளாயினள்.

அவள் அங்கே அப்படியிருக்க, மதவெறி கொண்டு தெருத்தோறும் சனங்களை வருத்தித் திரிந்ததான காலவேக மென்னும் யானையின் மதத் தை அடக்கி உதய குமரனென்பான் தேரேறிச் சேனையுடன் வந்தனன். அப்போது, நாடகக்கணி கையர் வீதியில் ஒரு மாடத்தே மலரணைமேற் காதற் பரத்தையொருத்தியோடு யாழின்கோட்டைத் தழு விக்கொண்டு மயங்கிப் பாவைபோலிருந்த எட்டி குமரனை அவன் தெருப்பக்கத்திலுள்ள சாளர வழி

யாற் கண்டு, "நீ அடைந்த துன்பம் யாது?" என்றான். உடனே அவன் துணுக்குற்று எழுந்து விரைந்து அருகே சென்று உதய குமரனை வணங்கித் துதித்து, "இயற்கையழகு கெட்டு மலர் வனத்திற்கு இவ்வீதி வழியே நடந்து செல்லும் மணிமேகலையைக் கண்டேன்; கண்டவுடன் அவளது தந்தையாகிய கோவலன் மதுரையிலடைந்த கொடுந் துன்பம் நினைவிற்கு வந்து என் மனத்திண்மையை மாற்றி இந்த யாழிலுள்ள பகை நரம்பில் என்கையைச் செலுத்தியது; இதுவே நான் அடைந்த வருத்தம்" என்று சொல்லினன். பல நாளாக மணிமேகலையை விரும்பிக்கொண்டேயிருந்த உதய குமரன், அவள் சோலை சென்றாளென்பதை அவனால் அறிந்து மகிழ்ந்து, "அங்கே போய் மணிமேகலையை என் தேரில் ஏற்றிக்கொண்டு வருவேன்" என்று எட்டி குமரனுக்குச் சொல்லிவிட்டுத் தேரைச் செலுத்திச் சென்று உவவனத்தின் மதில் வாயிலை அடைந்தான்.

மணிமேகலை அத்தேரொலியைக் கேட்டுச் சுதமதியை நோக்கி, "உதயகுமரன் என்மேல் மிக்க விருப்பமுடையவனென்று மாதவிக்கு வயந்தமாலை சொல்லியதை முன்னம் கேட்டுளேன். அவனுடைய தேரொலிபோலும் இது. இத்துன்பத்திற்கு யாது செய்வேன்!" என்று மயங்கிக் கூறினாள். அதைக் கேட்ட சுதமதி அவளை ஆங்குள்ள பளிக்கறையிற் புகுத்தித் தாழக்கோலிட்டுக்கொண்டு உள்ளே இருக்கச்செய்து தான் அப்பளிக்கறைக்கு ஐந்து விற்கிடைத் தூரத்தே நின்றாள்.] அங்ஙனம் நின்ற சுத

மதியைச் சோலையினுள்ளே வந்த உதயகுமரன் கண்டு, "யாருமில்லாத இவ்விடத்தே நிற்கின்றாய்; நீ மணிமேகலையுடன் வந்தாயென்று அறிந்துகொண்டேன்; அவள் முதுக்குறைவுற்றனளோ? அவளுடைய செவ்வாய் நகைத்தலைப் பெற்றதோ? கண்கள் பிறழ்ந்து உலாவி வேட்கையைப் புலப்படுத்துமோ? அவள் பௌத்த சங்கத்தாரிருப்பிடத்தை நீங்கி இவ்விடம் வந்ததற்குக் காரணம் யாது? சொல்" என்று தனது வேட்கை தோன்ற வினவினன்.

அப்பொழுது சுதமதி வாயிலில்லாத அறையில் அகப்பட்டோர் போல மனம் வருந்தி, "இளமைப் பருவத்திலேயே முதுமை வேடம் பூண்டு வழக்கைக் கேட்டு உண்மையை வெளிப்படுத்திய சோழன் கரிகாற்பெருவளத்தானுடைய வழித்தோன்றலே! நீ ஆண்டில் இளையையாயினும் அறிவில் முதியையல்லையோ? உனக்கு மகளிர் தெரிவித்தற்குரியனவும் உளவோ? ஆயினும் ஒன்று தெரிவிப்பேன். கேட்டருளுக:

வினையின் வந்தது, வினைக்குவிளை வாயது,
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூப்புவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங், குற்றக் கொள்கலம்,
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக், கவலை கையா றழுங்கல்,
தவலா வுள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (கக௩-உக)

என்று உடம்பினியல்பைக் கூறினள். அவள் அங்ஙனம் கூறிய இனிய வார்த்தை உதயகுமரனது காதை அடையுமுன்னே [பளிக்கறையினுள்ளேயிருந்த மணிமேகலையின் உருவம் அவன் கண்ணுக்குத் தோற்றியது.]

## ரு.—மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

[உதயகுமரன் அங்ஙனம் தோற்றிய வடிவத்தை மணிமேகலையின் வடிவமென்று நிச்சயித்து அப்பளிக்கறையினுள்ளே சென்றடைதற்கு நினைந்தனன். ஆனால், அதன் வாயில் காணப்படாமையால் அஃது இன்ன விடத்துள்ள தென்பதை அறிந்து கொள்ளுதற்குப் பளிக்குச்சுவரைக் கையால் தடவிக்கொண்டு சூழ்ந்து வந்தான். அங்கே சுதமதியைப் பார்த்து, "மணிமேகலை எத்திறத்தினள்? சொல்" என்று கேட்கவே சுதமதி, "அவள் தவவொழுக்கமுடையவள்; குற்றஞ்செய்தாரைச் சபிக்கும் வன்மையுமுடையவள்; சிறிதும் காமவிகாரம் இல்லாதவள்; ஆதலின், நீ அவளை விரும்புதல் தக்கதன்று" என்று கூறினள்.] ஆனால் அவன், "அவள் எத்தன்மையளாயினும் ஆகுக; எப்படியும் எனக்கு உரியளாகக்கடவள்" என்று சொல்லிக்கொண்டு போய் மீட்டும் சுதமதியைப் பார்த்து, "துறவொழுக்கம் பூண்ட சமணமாதர்களின் நடுவே ஒரு வித்தியாதரனால் இடப்பட்டவள் என்று எல்லோராலுங் கூறப்

படும் நீ அவர்களை நீங்கிப் பௌத்த சங்கத்தைச் சார்ந்த மாதவியின் மகளுடன் வந்ததற்குக் காரணம் யாது? சொல்'' என்றான்.

அதுகேட்ட சுதமதி, “அரச, சண்பை நகரத்துள்ள கௌசிகனென்னும் அந்தணனுடைய மகள் யான். என் இளமைப் பருவத்தில் அன்னை இறந்தனள். அவள் இறந்த பின்பு தந்தையால் ஆதரிக்கப் பட்டுவந்த நான் ஒரு சோலையிற் சென்று தனியே நின்று பூக்கொய்கையில் என்னை விரும்பி ஆகாயத்தே எடுத்துச்சென்று தன்வயமாக்கிக்கொண்ட வித்தியாதர னொருவனால் இடப்பட்டு இந்நகரத்தில் இருந்தேன். இதனை அறியாத என் தந்தையார் என்னைக்காணாமல் வருந்தித் தேடிக்கொண்டே கன்னியாகுமரியாற்றிற்கு நீராடச் செல்பவர்களோடு சென்றார். அப்போது இடையிலுள்ளதான இந்நகரத்துச் சங்கமுகத்துறையில் நீராடுதற்கு அந்தணர்களோடு வந்து என்னை இந்நகரிற் கண்டனர். ‘நீ இங்கே எப்படி வந்தனை?’ என்று வினவி வருந்தி, அந்தணர்களோடிருத்தற்கு நான் தகுதியில்லேனாயினும் என்னிடத்து மிக்க அன்புடையவராதலின், அவர் என்னைக் கைவிடாதவராகி மனை தோறும் பிச்சையெடுத்து உண்பித்துத் தாமுமுண்டு பொழுது கழிப்பாராயினர். அப்படி யிருக்கையில், ஒரு நாள் அவர் பிச்சை யெடுத்தற்குச் செல்லும் பொழுது இளங்கன்றையுடைய ஒரு பசு அவரை முட்டி வயிற்றைக் கிழித்துவிட்டது. அதனால் சரிந்த குடரைக் கையில் ஏந்திக்கொண்டு நான் இருந்தவிட

மென்று முன்பு அறிந்தவராதலாற் சமணப்பள்ளி யிற் புகுந்து, 'முனிவர்களே, யான் உங்கள் அடைக் கலம்; என்னைப் பாதுகாக்கவேண்டும்' என்று முறையிட்டார். அதைக் கேட்ட அவர்கள் சினந்து அவரை என்னோடும் புறத்தே தள்ளிவிட்டனர். நாங் கள் இருவரும் மிக்க துக்கத்துடனே புறவீதியிற் சென்று, 'கதியற்ற எம்மைப் பாதுகாக்கும் அறி வோர் யாரேனும் உண்டோ?' என்று புலம்பி முறை யிட்டோம் அப்பொழுது மனைதோறும் சென்று ஐய மெடுக்கும் பாத்திரத்தை ஏந்திய கையையுடையவ னும் முழுமதிபோன்ற முகத்தினனும் பொன்னிற முள்ள சீவர ஆடையினனுமாகிய சங்கதருமனென்ப னும் முனிவன் ஒருவன் விரைந்து வந்தான்; 'என்ன துன்பம் அடைந்தீர்கள்?' என்று அவன் எம்மை அருளுடன் பார்த்து இனிய மொழிகளைக் காதுகளில் நிறைத்து எம் மனத்தைக் குளிர்வித் தான்; உடனே தன் கையிலுள்ள பிச்சைப் பாத் திரத்தை என் கையிற்கொடுத்து என் தந்தையின் துன்பம் முற்றும் நீங்கும்படி அவரைத் தழுவி எடுத் துக்கொண்டு சென்று பௌத்தசங்கத்தார் இருப் பிடத்தைக் காட்டி என் தகப்பனாரின் மரணத்துன் பத்தையும் நீக்கினன். அம்முனிவன் எனக்குச் செவியறிவுறுத்திய,

> எங்கோ னியல்குண னேதமில் குணப்பொருள்
> உலக னோன்பிற் பலகதி யுணர்ந்து
> தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
> இன்பச் செவ்வி மன்பதை யெய்த

அருளறம் பூண்ட வொருபெரும் பூட்கையின்
அறக்கதி ராழி திறப்பட வுருட்டிக்
காமற் கடந்த வாமன் (எக-எ)

பாதங்களையே என்னுடைய நாவானது இடைவிடாமற் பாராட்டுமேயல்லாமல் வேறொன்றையும் சொல்ல அறியாது. அது முதல் பௌத்த சங்கத்தைச் சார்ந்திருந்த மாதவியிடத்தில் உறைவேனாயினேன். அதனால் இவளுடன் வந்தேன்" என்று கூறினள்.

அது கேட்ட [உதயகுமரன், "உனது இயல்பை அறிந்து கொண்டேன். மணிமேகலையைச் சித்திராபதியால் இனி அடைதலும் கூடும்" என்று சொல்லிவிட்டுக் காமபரவசனாய் அச்சோலையினின்றும் போயினன்.] போனவுடன் மணிமேகலை பளிக்கறையினின்றும் வெளியே வந்து சுதமதியை நோக்கி, "அன்பிலளென்றும் தவவுணர்ச்சி இல்லாதவளென்றும் வருணக்காப்பிலளென்றும் விலைமாதென்றும் என்னை உதயகுமரன் இகழ்ந்தானென்று நினையாமல், அவன் பின்னே என்னுடைய நெஞ்சமானது செல்லுதலுற்றது. இதற்குக் காரணம் யாது? காமத்தின் இயல்பு இதுவோ?" என்று சொல்லிக்கொண்டே நின்றாள். நின்ற பொழுது, இந்திர விழாவைக் காணுதலுற்ற மணிமேகலா தெய்வம் அவர்களுக்குத் தெரிந்தவளும் மாயவித்தை செய்பவளுமாகிய ஒரு மடந்தை வேடம் பூண்டு அச்சோலையையடைந்து பளிக்கறையிலுள்ள பாதபீடிகையை வலங்கொண்டு உயரஎழும்பிநின்று,

"புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்
உலக நோன்பி னுயர்ந்தோ யென்கோ
குற்றங் கெடுத்தோய் செற்றஞ் செறுத்தோய்
முற்ற வுணர்ந்த முதல்வா வென்கோ
காமற் கடந்தோ யேம மாயோய்
தீநெறிக் கடும்பகை கடிந்தோ யென்கோ
ஆயிர வாரத் தாழியந் திருந்தடி
நாவா யிரமிலே னேத்துவ தெவன்!" (௯௮-௧௦௫)

என்று துதிக்கத் தொடங்கியது. அங்ஙனம் துதித்துக் கொண்டிருக்கையிற் பகற்காலம் நீங்க அந்தி மாலை வந்தது.

## ௬.—சக்கரவாளக்கோட்ட முரைத்த காதை

பிறகு அந்திமாலைப் பொழுது நீங்கவே சந்திரன் உதயமாயினன். மணிமேகலாதெய்வம் மீட்டும்,

ஆதி முதல்வ னறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்தி (௧௧-௨)

அங்கே வாடிநின்ற சுதமதியைப் பார்த்து, "நீங்கள் இங்கே நின்றதற்குக் காரணம் யாது? என்ன துன்பம் அடைந்தீர்கள்?" என்று கேட்டாள். உதயகுமரன் மணிமேகலையை விரும்பிச் சொல்லிய சொல்லையும், பின்பு சித்திராபதியால் அவளைப் பெறலாமென்று அவன் எண்ணிச் சென்றதையும் சுதமதி கூறினள். அப்போது அத்தெய்வம் அவளைப் பார்த்து, "உதயகுமரனுக்கு மணிமேகலையினிடத்தி

லுள்ள ஆசை சிறிதும் தணியவில்லை. ‘இது முனிவர்களுடைய தவவனம்; இதில் யாம் தீங்கு செய்யலாகாது’ என்று எண்ணியே அவன் இச் சோலையை விட்டு நீங்கிச்சென்றான். இவள் இதனைக் கடந்து செல்வாளாயின், புறவீதியில் அவன் இவளை அகப்படுத்திக்கொள்ளுவான். இது மெய்யே. இச்சோலையைச் சூழ்ந்த மதிலின் மேற்றிசைக் கண்ணதாகிய சிறிய வாயில் வழியே நீங்கள் போய் முனிவர்கள் இருக்கும் சக்கரவாளக் கோட்டத்தை அடைக; அடைந்தால், ஒருபொழுதும் யாதொரு துன்பமும் அணுகாது” என்று சொல்லியது. உடனே சுதமதி, “மாருதவேகனும் நீயுமே அதனைச் சக்கரவாளக்கோட்டமென்று சொல்லுவீர். மற்றையோர் யாவரும் சுடுகாட்டுக்கோட்ட மென்றே சொல்லாநிற்பர்; சக்கரவாளக்கோட்ட மென்றதற்குக் காரணம் யாது? அதனைச் சொல்லுக” என்று கேட்கவே அத்தெய்வம் அதன் வரலாற்றைக் கூறலுற்றது:—

“காவிரிப்பூம்பட்டினம் தோன்றிய காலத்து உடன்தோன்றியதான நன்காடு ஒன்று இச்சோலையின் பக்கத்தேயுள்ளது. அது நாற்புறத்தும் வாயில்களையுடைய மதிலாற் சூழப்பட்டது; காளிகோட்டத்தையும், அருந்தவர் அரசர் கணவனிறக்க உடனே இறந்த மடவார் ஆகிய இவர்களுள் இன்னார் இன்னார் இன்ன இன்ன விடத்தே புதைக்கப் பட்டன ரென்பதற்கு அறிகுறியாக அவரவர்கள் வருணம் ஆச்சிரமம் முதலியவற்றிற்கும் அவரவர்கள் தகு

திக்கும் ஏற்பச் சிறியனவும் பெரியனவுமாகக் கட்டப்பட்டுள்ள பற்பல கோட்டங்களையும், மயானதெய்வங்களுக்குப் பலியிடுதற்குரிய தூண்களையும், கற்களை நிறுத்திச் செய்யப்பட்டுள்ள திண்ணைகளையும், காவற்காரர் உண்பதற்கும் உறங்குவதற்கும் அமைந்துள்ள குடிசைகளையும், தோரணங்களையும், பந்தர்களையும் உடையது; பிணங்களைச் சுடுதற்கும் சும்மா போடுதற்கும் குழியிற் புதைத்தற்கும் உள்ளே வைத்து வாயிலையடைத்தற்கும் தாழியாற் கவித்தற்குமாக இரவும் பகலும் வருபவர்களுடைய ஓசையும், அங்ஙனம் வந்து செல்பவர்களுடைய ஓசையும், சாப்பறைகளினோசையும், இறந்த துறவிகளைத் தொழுபவரோசையும், மற்றையோர் பொருட்டு அழுபவரோசையும், நரியின் கூக்குரலோசையும், செத்தோரை அழைக்கும் பேராந்தைகளினோசையும், கோட்டானுடைய குரலும், ஆண்டலைப் பறவைகளின் குரலும் அம்மயானத்தில் மிகுதியாக உண்டு. தான்றி, ஒடுவை, உழிஞ்சில், காரை, சூரை, கள்ளி முதலிய பற்பல மரவிசேடங்களும் அங்கே அடர்ந்துள்ளன. பேய்கள் நெருங்கியுள்ள வாகைமரம் நிற்கும் மன்றங்களையும், நிணத்தோடு இறைச்சிகளைத் தின்று மகிழ்ந்து பறவைகள் தங்கியுள்ள விளாமரம் நிற்கும் மன்றங்களையும், காபாலிக சமயத்தோர் வாழும் வன்னிமரம் நிற்கும் மன்றங்களையும், விரதத்தால் இளைத்த உடம்பையுடைய சிலர் உடைந்த தலைகளை மாலையாகக் கட்டும் இலந்தைமரம் நிற்கும் மன்றங்களையும், பிணங்களைத்

தின்போர் தனித்து வாழும் வெளியான இடங்கள் உள்ள மன்றங்களையும் அம்மயானம் உடையது. நெருப்பிருந்த பாண்டங்களும் புழலென்னும் சிற்றுண்டியைப் பெய்த மண்டைகளும் பாடைகளும் அறுத்தெறிந்த மாலைகளும் உடைந்த குடங்களும் நெல்லும் பொரியும் சிறுபலியாக இடப்பட்ட அரிசியும் எங்கும் பரவப்பெற்றது.

தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னா னிளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ! (கூஎ-க0ச)

இத்தன்மையதான அச்சுடுகாட்டைப் பார்ப்பனச் சிறுவனாகிய சார்ங்கலென்னும் ஒருவன் ஒரு நகரமாக நினைந்து அதில் தனியே சென்றான். அப்போது அங்கே களித்தாடிய பேயொன்றைக் கண்டு அஞ்சி அதனால் தாக்கப்பட்டுக் கதறிக்கொண்டு ஓடித் தன் தாயாகிய கோதமையை அடைந்து, 'சுடலையிலுள்ள பேய்க்கு என்னுயிரைக் கொடுத்தேன்' என்று சொல்லி அவள்முன் வீழ்ந்து இறந்தான். உடனே கோதமை, 'முதுமைப் பருவமடைந்து தளர்ந்த என் கணவரும் யானும் கண்ணிழந்துள்ளேமென்பதையும் வேறு புகலில்லையென்பதையும் நினையாமல் எங்கள் மைந்தனுடைய

உயிரையுண்டது அணங்கோ பேயோ அறிகி லேனே?' என்று புலம்பினள். பிறகு, தன் அருமைப் புதல்வனுடைய உடம்பை எடுத்து மார்போடு தழுவிச் சென்று சுடுகாட்டைச் சூழ்ந்த மதில் வாயிலை அடைந்து நின்று, 'சம்பாபதீ! நீர்த்துறைகளிலும் மன்றங்களிலும் பழைய மர அடிகளிலும் கோட்டங்களிலும் வேறிடங்களிலும் இருந்து யாருக்கும் எந்தச் சமயத்தும் யாதொரு தீங்கும் அணுகாவண்ணம் பாதுகாத்தருளும் நீ என் மகனைக் காவாமல் ஒழிந்ததற்குக் காரணம் யாது? நின்பால் நடுவுநிலைமை இல்லையோ? இனி யான் என் செய்வேன்!' என்று வருந்தி முறையிட்டாள்.

"முறையிடவே சம்பாபதி தோன்றி, 'இவ்விரவில் இம்மயானத்திற் பேய்கள் போக்குவரவு செய்யும் வாயிலில் நின்று மிக்க வருத்தமடைந்து நீ என்னை அழைத்தற்குக் காரணம் யாது? சொல்' என்று கூற, கோதமை நிகழ்ந்ததை உரைத்தாள்; சம்பாபதி, 'உன் மகனுயிரை அணங்கும் பேயும் கவர்ந்தில. அவனுடைய அறியாமையையே பற்றுக்கோடாகக் கொண்டு இழவூழே அவனுயிரைக் கவர்ந்து சென்றது' என்று கூறினள். கோதமை, 'என்னுயிரை வாங்கிக்கொண்டு இவனுயிரை நீ தந்தருள்வாயாயின் இவன் கண்ணற்ற தன் தந்தையைக் காத்தளிப்பான். ஆதலால் அங்ஙனம் செய்தருள்வாயாக' என்று வேண்டினள். சம்பாபதி மனமிரங்கி, 'உயிர் உடம்பைவிட்டு நீங்கின் அது வினைவழியே சென்று வேறு பிறப்பை அடையா

நிற்கும். இதில் ஏதேனும் ஐயமுண்டோ? போன உயிரை மீட்டளித்தல் என்னால் இயலும் காரிய மன்று. ஆதலால் உன் மகன் இறந்ததுபற்றி நீ இரங்காதே.

> உலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோர்
> இலரோ விந்த வீமப் புறங்காட்
> டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம்
> நிரயக் கொடுமொழி நீயொழி' (௧௬௪-௭)

என்றனள்; கோதமை, 'கேட்டவரங்களையெல்லாம் தேவர் தருவாரென்று நூல்கள் சொல்லுகின்றன. ஆதலால் யான் கேட்ட இவ்வரத்தை நீ தந்தருள்க. தாராயாயின், இவ்விடத்தில் இப்பொழுதே என் உயிரைத் துறப்பேன்' என்று சொன்னாள்; உடனே சம்பாபதி, 'நீ சொல்லியபடியே இச்சக்கரவாளத் துள்ள தேவர்களில் யாரேனும் நீ கேட்ட வரத் தைக் கொடுப்பாராயின் யானும் அதனைக் கொடுப் பேன். என் ஆற்றலைக் காண்பாயாக' என்று சொல்லி நான்குவகை அருவப்பிரமகணங்களையும் பதினாறுவகை உருவப் பிரமகணங்களையும் இரு சுடர்களையும் அறுவகைத் தெய்வகணங்களையும் பல வகை அசுரகணங்களையும் எண்வகை நரகர்களையும் பல விண்மீன் கூட்டங்களையும் அசுவினி முதலிய இருபத்தேழு நாட்களையும் கோட்களையும் தனக் குள்ளே அடக்கிக்கொண்டிருக்கும் சக்கரவாளத் தில் வரங்கொடுக்கும் வன்மையையுடைய தேவர் களை யெல்லாம் வருவித்துக் கோதமைக்கு முன்னே

நிறுத்தி, 'இவளுடைய வருத்தத்தை அகற்றுவீர்களாக; இவளடைந்த வருத்தம் இதுவாகும்' என்று நிகழ்ந்தவற்றைச் சொல்லிற்று; அப்போது அத்தேவர்கள் சம்பாபதி கூறியவாறே கூறி முடித்தார்கள். கோதமை அதனைக் கேட்டு உண்மையையறிந்து ஒருவாறு வருத்தமொழிந்து தன் மகனைச் சுடுகாட்டிற் சேர்த்துவிட்டு இறந்து போயினள்.

"அப்பால், சம்பாபதியின் வன்மையை யாவருக்கும் புலப்படுத்த வேண்டி, எல்லாத்தேவர்களும் கூடியவிடத்து அவர்கள் கூடியதற்கு அறிகுறியாக மயன் இவ்வுலகின் நடுவேயுள்ள மேருமலையையும் அதனைச் சூழ்ந்த ஏழு சிறு மலைகளையும் நான்கு பெருந் தீவுகளையும் இரண்டாயிரம் சிறுதீவுகளையும் மற்ற இட விசேடங்களையும் புலப்படுத்தி ஆங்காங்கு வாழ்பவர்களுடைய உருவங்களையும் வகுத்து இவ்விடத்தை நிருமித்தான்; ஆதலின் இது சக்கரவாளக் கோட்டமென்று பெயர்பெற்றது. இது சுடுகாட்டைச் சூழ்ந்த மதிலின்புறத்தே இருத்தலின் இதனை எல்லோரும் சுடுகாட்டுக் கோட்டமென்று வழங்குவர்; இதன் வரலாறு இதுவாகும்."

மணிமேகலா தெய்வம் இங்ஙனம் சொல்லக் கேட்ட மணிமேகலை, "மனிதர் வாழ்க்கை இத்தன்மைத்து" என்று சொன்னாள். அவள் அங்கே அப்படியிருக்கையில், சுதமதி துயிலுற்றனள்; அப்பொழுது அத்தெய்வம் தன் வித்தையால் மயக்கி மணிமேகலையைத் தழுவி யெடுத்துக்கொண்டு ஆகாயவழியே முப்பது யோசனையளவு தெற்கே

சென்று கடல்சூழ்ந்த மணிபல்லவமென்னும் சிறு தீவையடைந்து அதில் அவளை வைத்துவிட்டுச் சென்றது.

## எ.—துயிலெழுப்பிய காதை

பிறகு, 'விடிந்தால் மணிமேகலையை எப்படியும் நாம் அகப்படுத்திக்கொள்வோம்' என்று உதயகுமரன் எண்ணிக்கொண்டு காமபரவசனாய்த் துன்பமுற்றுத் தூங்காமலேயிருந்தான். அவன்முன்னே மணிமேகலா தெய்வம் தோன்றி அவன் காண நின்று,

"...................மன்னவன் மகனே
கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
தன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்
தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த
அவத்திற மொழி" (எ - கச)

என்று அவனுக்கு உபதேசித்துவிட்டு உவவனம் போயிற்று. அங்கே தூங்கிய சுதமதியை எழுப்பி, "யான் மணிமேகலாதெய்வம். இந்நகரில் நடக்கும் இந்திரவிழாவைக் காணுதற்கு வந்தேன். நீ அஞ்சாதே. பௌத்தசமயவழியே செல்லுதற்குரிய நற்காலம் மணிமேகலைக்கு உண்டாயிற்று. ஆதலால் அவளை எடுத்துச் சென்று மணிபல்லவத்தில் வைத்

தேன். தன்னுடைய முற்பிறப்பில் நிகழ்ந்த செய்தியையும் அறிந்துகொண்டு அவள் இற்றைக்கு ஏழாவது நாளில் இங்கே வந்து சேருவாள். இந்நகரில் வேறுவடிவம் கொள்வாளாயினும் அவள் உனக்கு ஒளிப்பாளல்லள். அவள் இங்கே புகும்நாளில் இந்நகரின் கண்ணே பல அற்புதங்கள் நிகழும்; அவள் நல்ல வழியிற் சென்றதையும் நான் வந்ததையும் மாதவிக்குச் சொல்வாயாக. மாதவி முன்னமே என்னையறிவாள். கோவலன், 'நமது குலதெய்வத்தின் பெயரை இக்குழந்தைக்கு இடுக' என்று சொல்லி என்பெயரை இம் மணிமேகலைக்கு வைத்தநாளின் இரவில் யான் மாதவியின் கனவிற் சென்று, 'காமன் செயலற்று ஏங்கும் வண்ணம் ஆசையை முற்றக்கெடுக்கும் தவமாதைப் பெற்றாய்' என்று நனவிற் கூறுவதுபோல் கூறியதுண்டு. இதனையும் அவளுக்கு நினைப்பூட்டுவாயாக" என்று கூறிப் போயிற்று.

அப்பால் சுதமதி எழுந்து மணிமேகலையின் பிரிவால் வருந்தி அச்சோலையைச் சூழ்ந்த மதிலின் மேற்கேயுள்ள சிறிய வாயில்வழியே சென்று சக்கரவாளக் கோட்டத்தையடைந்து ஆங்குள்ள உலகவறவியின் ஒருபக்கத்தேயிருந்தாள். அப்படியிருக்கும்பொழுது அவ்விடத்தே தூணிலுள்ள பாவையொன்றை அதிட்டித்திருக்கும் தெய்வமொன்று சுதமதி மயங்கி அஞ்சும்படி,

"இரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி

தயங்கிணர்க் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனோ டிந்நகர் புகுந்து
தாரை தவ்வை தன்னொடு கூடிய
வீரை யாகிய சுதமதி கேளாய்" (௯௮ - ௧௦௫)

உன் தங்கையாகிய இலக்குமி தனது முற்பிறப்பையும் உனது முற்பிறப்பையும் அறிந்துகொண்டு இற்றைக்கு ஏழாநாளிரவில் இந்நகரத்துக்கு வருவாள். அவள் பிரிந்ததுபற்றி நீ அஞ்சற்க" என்று தன்னுடைய வாக்காற் கூறியது. அதனைக் கேட்டு மனம் நடுங்கிய சுதமதி பொழுது புலருமளவும் அவ்விடத்தே யிருந்து சூரியனுதித்தவுடன் எழுந்து புறப்பட்டு வீதிவழியே சென்று மாதவியை யடைந்து முதனாளிரவில் நிகழ்ந்தவற்றைக் கூறினள். அதுகேட்ட மாதவி மாணிக்கத்தையிழந்த நாகம்போன்று மிக்க துயரத்தோடிருந்தாள். மணிமேகலையின் பிரிவாற்றாமையால் சுதமதி உயிரிழந்த உடம்புபோலச் செயலற்றிருந்தனள். 25-1-42

---

## அ.—மணிபல்லவத்துத் துயருற்ற காதை

சுதமதி இங்கே இப்படியிருக்க, மணிபல்லவத்திற் கடலருகே மணலிலே துயின்ற மணிமேகலை துயிலுணர்ந்தாள். அவளுக்குத் தெரிந்தபொருள் யாதொன்றும் அங்கே காணப்படாமையால்,

தான் முன்பிருந்த இடத்தைத் துறந்து வேற்றிடத்துக்குச் சென்று பிறந்த உயிர்போன்றவளாகித் திகைத்துக்கொண்டிருந்தனள். அப்போது சூரியன் உதித்தான்; உடனே அவள், "இவ்விடம் உவவனத்தில் முன்னம் கண்டறியப்படாத ஒரு பகுதியோ!

*சுதமதி யொளித்தாய் துயரஞ் செய்தனை*
*நனவோ கனவோ வென்பதை யறியேன்*
*மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்*
*வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கும்*
*மெல்வளை வாராய் விட்டகன் றனையோ!* (உ௦ - உச)

மாயவித்தையோடு தோன்றிய அம்மடந்தை செய்த வஞ்சமோ இது! ஒன்றும் தெரியவில்லையே! தனியே இருத்தற்கு மிகவும் அஞ்சுகின்றேன். நீ விரைந்து வருவாயாக" என்று சொல்லிக்கொண்டு பல நீர்த்துறைகளிலும் பல மணற்குன்றங்களிலும் சென்று தேடித் தனக்குத் தெரிந்த ஒருவரையும் காணுமல் கூக்குரலிட்டு வருந்தியழுது தன் தந்தையை நினைந்து,

*"கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து*
*வைவா ளுழந்த மணிப்பூ ணகலத்*
*தையா வோ"* (சக - ௩)

என்று அரற்றினள்; அப்போது இந்திரனுலிடப் பட்டதும் தரிசித்தோர்க்குப் பழம்பிறப்பைத் தெரிவிப்பதுமாகிய புத்த பீடிகை அவள் முன்னே தோன்றியது.

## கூ.—பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை

[மணிமேகலை அப் பீடிகையைக் கண்டு விம்மிதத்தால் தன்னை அறியாளாயினள். அவளுடைய கைகள் தலைமேற் குவிந்தன. பின்பு ஆனந்தக் கண்ணீரை யுகுத்து அப்பீடத்தை மூன்றுமுறை வலம் வந்து பணிந்து எழுந்தனள்.] அப்பீடிகைக் காட்சியால் தன் பழம்பிறப்பில் நிகழ்ந்த செய்திகளை யறிந்து, "மாதவ, உறுதிப்பொருளையுணர்ந்தோய், காயங்கரை யென்னும் நதிக்கரையில் நீ சொல்லியவெல்லாம் உண்மையாதலை விளங்க அறிந்தேன் :—

"காந்தாரமென்னும் பெரியதொரு நாட்டிலுள்ள பூருவ தேசத்தில் இடவயமென்னும் நகரை இராசதானியாகக்கொண்டு அரசு புரிந்து வாழும் அத்திபதியென்னும் அரசனுடைய மைத்துனனாகிய பிரமதரும, நீ அவ்வரசனிடத்திற் சென்று தருமோபதேசம் புரிகையில், 'இச்சம்புத் தீவில் இற்றைக்கு ஏழாவதுநாளில் பூகம்பமுண்டாகும்; அப்பொழுது இந்நகரும் நாகநாட்டில் நானூறு யோசனைப்பரப்பும் பாதலத்தில் வீழ்ந்து கெட்டொழியும்; ஆதலால், நீ இந்நகரத்தை விட்டு விரைவில் வேறுநகரம் புகுவாய்' என்று கூறியருளினை. அவன் நகரத்தார் யாவருக்கும் அச்செய்தியைப் பறையறைவித்துச் சாற்றி எல்லாருடனும் அந்நகரை நீங்கி அதற்கு வடக்கேயுள்ள அவந்திநகரம் செல்லுதற்குப் புறப்பட்டு வழிக்கொண்டு இடையே

யுள்ள காயங்கரை யென்னும் நதிக்கரையை அடைந்து அங்கே பாடிவீடு செய்துகொண்டிருந் தனன். அப்பொழுது, ஐயா! நீ உரைத்தபடியே குறித்தநாளிற் பூகம்பமுண்டாக இடவயநகரம் அழிந்து போயிற்று. அது தெரிந்த அரசனும் மற்றையோரும் உன்பால் அன்புமிக்கு உன்னைச் சரணமடைந்து சூழ்ந்து நின்றனர்; அக்காலத்தில் அவர்களுக்கு முத்திவழியை நீ உபதேசித்தனை.

"அசோதரநகரத்து அரசனாகிய இரவிவன் மன் என்பவனுடைய தேவியான அமுதபதியென் பவள் வயிற்றில் யான் பிறந்து இலக்குமியென்று பெயர்பெற்றேன். அத்திபதி என்னும் அரசனுக்கு நீலபதியென்பவள்பாற் பிறந்த இராகுலனுக்கு மனைவியாய்ப் புகுந்தேன். அப்போது என் கணவ னோடு வந்து தருமங் கேட்டற்பொருட்டு யான் நின்னை வணங்கியவுடன் நீ என்னை நோக்கி, 'இவ் விராகுலன் இற்றைக்குப் பதினாறுவதுநாளில் திட்டி விடமென்னும் பாம்பால் இறப்பான். நீ இவனோடு தீயிற் புகுவாய். பின்பு காவிரிப்பூம்பட்டினத்திற் சென்று பிறப்பாய். அவ்விடத்தில் உனக்கு ஒரு துன்பம் வரும். அப்பொழுது மணிமேகலாதெய் வம் வந்துதோன்றி நள்ளிரவில் உன்னையெடுத்துப் போய்க் காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே கடலிலுள்ள சிறுதீவொன்றில் வைத்துவிட்டுச் செல்லும். பின் ஆங்குள்ள புத்த பீடிகையை நீ தரி சித்துத் தொழுவாய். உடனே உனது முற்பிறப் பில் நிகழ்ந்த செய்திகளை அறிந்து இன்று நான்

சொன்ன மொழிகளையும் தெரிந்து கொள்வாய்' என்று சொல்லியருளினை. என்கேள்வன் இன்னவாறு பிறப்பானென்பதையும் தெரிவிக்கவேண்டும் என்று நான் கேட்டேன். எனக்கு, 'உன்னைக் கொண்டுசென்ற தெய்வம் மீண்டும் தோன்றி உனக்கு அதனைப் புலப்படுத்தும்' என்று அருளிச் செய்தாய்; அத்தெய்வம் வரவில்லையே!" என்று ஏங்கி அழுதுகொண்டிருந்தாள்.

## கo.—மந்திரங்கொடுத்த காதை

மணிமேகலை இப்படி இருக்கையில், 'புத்த பீடிகைக் காட்சியால் இவள் பழம்பிறப்பையறிந்தாள். இவளுடைய இயற்கையும் அழகியது' என்றெண்ணி ஆகாயத்தினின்றும் இறங்கிவந்த மணிமேகலாதெய்வம் அவள் கேட்கும்படி,

"உயிர்க ளெல்லா முணர்வுபா ழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோர்
இளவள ஞாயிறு தோன்றிய தென்ன
நீயோ தோன்றினை நின்னடி பணிந்தேன்
நீயே யாகிநிற் கமைந்தவிவ் வாசனம்
நாமிசை வைத்தேன் றலைமிசைக் கொண்டேன்
பூமிசை யேற்றினேன் புலம்பறுக" (ஏ - கரு)

என்று புத்த தேவருடைய பீடிகையை அவராகவே மதித்துத் துதித்து வலம்வந்து பூசித்து வணங்கி

யது. அத் தெய்வத்தை மணிமேகலை வணங்கி, "உன் திருவருளால் என்னுடைய முற்பிறப்பை அறிந்தேன்; அப்பிறப்பிற் கணவனாக இருந்த இராகுலன் எங்கே பிறந்துளன்?" என்று கேட்டாள்.

அவளை நோக்கி அத்தெய்வம், "இலக்குமி, கேட்பாயாக: நீ ஒருநாள் சோலையொன்றில் இராகுலனோடு ஊடியிருந்தாய். அப்பொழுது அவன் ஊடலைத் தீர்த்தற்கு உனதடியை வணங்கினான்; அச்சமயம் சாதுசக்கரனென்னும் பௌத்த சாரண முனிவனொருவன் இரத்தினத்தீவம் சென்று அங்கே தருமசக்கரத்தைப் பிரவிருத்திக்கச்செய்து விட்டு ஆகாயத்தினின்றும் இறங்கிவந்தான். நீ அவனைக்கண்டு மெய்ந்நடுங்கி மயங்கிக் கலங்கி ஒல்கிப்பணிந்தாய்; அதுகண்ட இராகுலன், 'இங்கே வந்தவன் யார்?' என்று கோபித்துக் கேட்கவே நீ அஞ்சி நடுநடுங்கி அவன் வாயைப் பொத்தி, 'ஆகாயத்தினின்றும் இறங்கிய இப்பெரியோனுடைய மலரடியை வணங்காமலும் இவனைத் துதியாமலும் இருந்தது எவ்வளவு பெரும்பிழை?' என்று அவனுக்குச் சொல்லி அவனோடும் அம்முனிவனுடைய பாதங்களை வணங்கி, 'யாங்கள் தேவரீருடைய அடியேமல்லமாயினும்,

அந்நீர் தண்ணீ ரமுதொடு கொணர்கேம் (நஎ);

அமுதுசெய்தருள்க; தேவரீருடைய திருவுள்ளப்பாங்கின்படியே நடத்தற்கு உரிமையுடையேம்' என்று

தெரிவித்தனை; உடனே அம்முனிவன், 'தாயே, உண்பேன்; இங்கே கொண்டு வருக' என்று சொல்ல, நீ உடனே அவற்றைக் கொணர்ந்து அவனை உண்பித்தாய்.

அங்கா ளவனுண் டருளிய வவ்வறம்
நின்னுங் கொழியாது நின்பிறப் பறுத்திடும்
(சO - சக);

"அவ்விராகுலனே உவவனத்தில் உன்பால் வந்த உதயகுமரன். அதனாலேதான் அவனுடைய மனம் உன்னை விரும்பியதோடு உன் மனமும் அவனை மிகவும் பற்றியது. அந்தப் பற்றை மாற்றி நல்வழிப் படுத்தற்கு நினைந்து உன்னை இத்தீவிற் கொணர்ந்துவைத்து இப்பீடிகையைக் காட்டினேன்.

"இலக்குமீ, இன்னும் கேட்பாயாக: முற்பிறப்பில் உன்னுடைய தமக்கைமாராயிருந்த தாரையையும் வீரையையும் அங்கநாட்டுள்ள கச்சய நகரத்தரசனாகிய துச்சயனென்பவன் மணஞ்செய்து கொண்டான். ஒரு நாள் அவன் அவர்களோடு சென்று மலைவளங்களைக் கண்டு வந்து கங்கைக் கரையை அடைந்திருந்தனன்; அப்பொழுது அறவணவடிகள் அங்கே வரக்கண்டு உடனே அவன் எழுந்து வணங்கி, 'தேவரீர் யாவிர்? எங்கே எழுந்தருளியது?' என்றுகேட்டனன். அவர், 'பாதபங்கய மலையைத் தரிசித்தற்கு வந்தேன்; ஆதிகாலத்தே புத்ததேவர் எல்லாவுயிர்களும் துக்கத்தினின்றும் நீங்கி இன்புற்றிருக்க வேண்டுமென்று நினைந்து

அவைகள் யாவும் கேட்டு மகிழும்படி அம்மலையின் உச்சியில் நின்றுகொண்டு தருமோபதேசஞ் செய்த னர்; அப்பொழுது அவருடைய பாதச்சுவடுகள் தங்கப் பெற்றமையால், அஃது அப்பெயரை யுடைய தாயிற்று. குற்றமற்ற அறிவுடையீர், நீங்களும் அதைத் தரிசித்து வழிபடுமின்' என்று கூறினர். அவர் கூறியவாறு உடனே சென்று அம்மலையை அடைந்து தரிசித்த புண்ணிய விசேடத்தால் தாரை யும் வீரையும் முறையே மாதவியாகியும் சுதமதி யாகியும் வந்து உன்னோடு கூடினர். [மணிமேகலை, நீ பழம்பிறப்பை அறிந்தாய்; தருமத்தின் தோற்றத் தையும் தெரிந்துகொண்டாய்; மற்றச் சமயவாதி களுடைய கொள்கைகளையும் இனி ஒரு காலத்திற் கேட்பாய். அங்ஙனம் கேட்கும்பொழுது உன்னை, 'இளமைப் பருவத்தினள்' என்று நினைந்து அவர் கள் தத்தம் சமய உண்மைகளைச் சொல்லார்கள்; ஆதலால், அக்காலத்து நீ வேற்றுவடிவம் கொள்ள வேண்டுவது இன்றியமையாதது" என்று கூறி வேற்று வடிவைக் கொடுப்பதும் ஆகாயவழியே சஞ்சரிக்கச் செய்வதுமாகிய மந்திரங்கள் இரண்டை அவளுக்கு உபதேசித்தது. அப்பால், "நீ புத்த தேவர் அருளிச் செய்த நல்லறவழியை நணுகுதல் ஒருதலையென்று உணர்வாயாக. இப்பீடிகையை வணங்கித் துதித்து ஊர் செல்வாயாக" என்று சொல் லிற்று; பிறகு அது மேலே செல்லுதற்கு எழுந்து, "இன்னும் ஒன்றைச் சொல்ல மறந்துவிட்டேனே" என்று மீட்டும் இறங்கி வந்து, "சிறந்த விரத

வொழுக்கமுடையாய்! கேட்பாயாக: மக்கள் யாக்கை உணவாலாகிய தொகுதி; இம்மந்திரமோ பசியைத் தொலைக்கும்; இதனைக் கொள்வாயாக" என்று சொல்லி அம்மந்திரத்தை அவளுக்கு உபதேசித்து விட்டு எழுந்து ஆகாய வழியே சென்றது.]

## கக.—பாத்திரம் பெற்ற காதை

அப்பால் மணிமேகலை அத்தீவிலுள்ள மணற் குன்றுகளையும் பூஞ்சோலைகளையும் குளிர்ந்த பொய்கைகளையும் பார்த்துக்கொண்டே மெல்ல உலாவி வந்தனள். அப்போது ஒருத்தி வந்து நின்று, "கப்பல் கவிழப்பெற்ற மகளிர்போல இவ் விடம் தனியே வந்த நீ யார்?" என்று கேட்டாள்.

மணிமேகலை, "பொற்கொடி போல்வாய், 'நீ யார்?' என்றது, என்னுடைய எந்தப் பிறப்பின் செய்தியைத் தெரிந்து கொள்ளுதற்கு? கேட்பா யாக: சென்ற பிறப்பில் இலக்குமி யென்னும் பெயரையுடையேன் யான்; இராகுலனென்னும் அரசிளங்குமரனுக்கு மனைவியாயிருந்தேன். இப் பிறப்பில் நாடகக் கணிகையாகிய மாதவியின் வயிற்றிற் பிறந்தேன்; என்பெயர் மணிமேகலை யென்று சொல்வர். மணிமேகலாதெய்வம் காவிரிப் பூம்பட்டினத்துள்ள உவவனத்திலிருந்து இத்தீவிற் கொண்டு வந்து வைத்தமையால் இந்தப் பீடிகை யைத் தரிசித்து முற்பிறப்பை அறிந்துகொண் டேன். இங்கே வந்தமையால் நான் அடைந்த

பயன் இது; என்னுடைய வரலாறும் இதுவாகும். பூங்கொடி போல்வாய், உன் வரலாறு யாது?" என்று கேட்டனள்.

உடனே அவள், "இத்தீவிற்கு அயலிலுள்ள தான இரத்தினத் தீவத்திலே மிகவுயர்ந்து விளங்கா நின்ற சமந்தகூடமலையின் உச்சியிலேயுள்ள புத்த தேவரது அடியிணைப் படிமைகளைத் தரிசித்துவிட்டு இத்தீவிற்கு முன்னொருகாலத்தில் வந்தேன். வந்தது முதல் இந்திரன் கட்டளையால் இந்தத் தருமபீடிகை யைக் காத்துக்கொண்டு இவ்விடத்திலேயே இருக் கிறேன். என்பெயர் தீவதிலகை யென்பது. புத்த தேவர் அருளிச்செய்த நல்லற வழியே நடப்போர் யாரேனும் இதனைத் தரிசிப்பாராயின், அவர்கள் அந்தத் தரிசனவிசேடத்தால் உடனே தம்முடைய பழம்பிறப்புணர்ச்சியை அடைவது திண்ணம். அத் தன்மையினையுடையோர் உலகத்தில் மிகவும் அரியர். அவர்களுக்கே தருமபதம் உரியது. இஃது உண்மை. பழம்பிறப்புணர்ச்சியை அடைந்தமையால் நீ மிக வும் பெரியை. இந்தப் பீடிகைக்கு முன்னே மாமலர்க்குவளையும் நெய்தலும் மயங்கிய கோமுகி யென்னும் கொழுநீரிலஞ்சி யொன்று உள்ளது. அப்பொய்கையினுள்ளேயிருந்து அமுதசுரபி யென் னும் அக்ஷயபாத்திரம் ஒவ்வொரு வருடத்தும் புத்த தேவர் அவதரித்த காலமாகிய வைசாகசுத்த பூர் ணிமையில் மேலே வந்து தோன்றும். இத்தினம் அப்பூர்ணிமையே. அது தோன்றும் வேளையும் இதுவே. இப்பொழுது அப்பாத்திரம் உன்கையில்

வருமென்று எண்ணுகிறேன். அதில் இடப்பட்ட அன்னம் எடுக்க எடுக்க மேன்மேலும் வளர்ந்து கொண்டே யிருக்கும். அதன் வரலாற்றை உன்னூரிலுள்ள அறவணவடிகளிடத்தே இனி நீ கேட்பாய்" என்று சொன்னாள். கேட்ட மணிமேகலை அவ்வக்ஷயபாத்திரத்தைப் பெறுதற்கு **விரும்பிப்** புத்தபீடிகையை வந்தித்து அவளோடு சேர்ந்து சென்று கோமுகிப்பொய்கையை வலஞ்செய்து வந்துநின்றனள். உடனே அப்பாத்திரம் அப்பொய்கையினுள்ளிருந்து மணிமேகலையின் கையை அடைந்தது. அவள் அளவுகடந்த மகிழ்ச்சியுற்று நின்று,

*"மாரனை வெல்லும் வீர நின்னடி*
*தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி*
*பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி*
*துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி*
*எண்பிறக் கொழிய இறந்தோய் நின்னடி*
*கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி*
*தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி*
*வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி*
*நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி*
*உரகர் துயர மொழிப்போய் நின்னடி*
*வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற்*
*கடங்காது"* (சுக - எஉ)

என்று புத்ததேவரைத் துதித்தாள். இங்ஙனம் துதித்த மணிமேகலைக்கு உயிர்களுடைய பசித்துன்பத்தையும் அதனைத் தீர்ப்போருடைய பெருமையையும் தீவதிலகை சொல்லலாயினள் :

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
* * * புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோர்
இசைச்சொ லளவைக் கென்னா நிமிராது (எரு-அக.)

"முன்னொரு காலத்தில் மழையே இல்லாமற் போனமையால், பசியால் வருந்திய கௌசிகமுனிவர் அதனைத் தீர்த்துக்கொள்ளுதற்கு எங்கும் திரிந்து சிறிதும் உணவு கிடையாமையால் மெலிந்து பின் நாயிறைச்சியைப் பெற்றுத் தின்னப்புகுந்து முதலில் அவ்விறைச்சியின் ஒருபகுதியைத் தெய்வங்கட்குப் பலியிடுவாராயினர். அதுதெரிந்த இந்திரன் உடனே எங்கும் மழைபெய்யச் செய்தமையால், உயிர்கள் களித்து வாழும்படி விளைவு பெருகியதென்பர். அதை நீ கேட்டிருப்பாயே.

ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே (கூஉ-கூ.)

ஆதலால், பசியைப் போக்கி உயிரைக் கொடுத்தலாகிய தருமத்தைச் செய்வாய்" என்று கூறினள்.

அதுகேட்ட மணிமேகலை, "போன பிறப்பில் என் கணவனாகிய இராகுலன் திட்டிவிடமென்னும் பாம்பால் இறந்தது பொறாமல், யான் தீப்பாய்ந்து உயிரோடு வேவாநின்றேன். அப்பொழுது, முன்

னம் சாதுசக்கர முனிவனை உண்பித்த நினைவை யுடையேனானேன். இறக்குங் காலத்தில் எனக்கு அந்நினைப்பிருந்த புண்ணிய விசேடத்தாலேயே இந்தப் பாத்திரம் என் கையிற் புகுந்ததென்று எண்ணுகிறேன். இது நிற்க; பசியால் வாடிய குழந்தையின் முகத்தைக் கண்டு மனமிரங்கிப் பால் சுரக்கும் தாய்போலவே வயிறுகாய் பெரும்பசி அலைத்தற்கு இரங்கி வெயிலென்றும் மழையென்றும் பாராமல் எங்கும் வாடி அலைந்து திரியும் ஏழைகளுடைய முகத்தைக் கண்டு இரங்கி இப்பாத்திரம் மேன்மேலும் அவர்களுக்கு அமுது சுரந்தளித்தலைக் காணும் விருப்பமுடையேன்" என்று சொல்லினள். அது கேட்டு மகிழ்ந்த தீவதிலகை அவளோடு பின்னும் சில நேரம் அளவளாவியிருந்து, "இனி இப்பாத்திரத்தோடு உன் ஊருக்குச் செல்வாயாக" என்று விடை கொடுத்தாள். மணிமேகலை அவள்பாதத்தை வணங்கிப் புத்த பீடிகையைத் தொழுது வலஞ்செய்து ஆகாயகமன மந்திரத்தை ஜபித்து மேலேயெழுந்து ஆகாய வழியே சென்று காவிரிப்பூம்பட்டினத்தை அடைந்தனள். அங்கே தன்னைக் காணாது வருந்தித் திகைத்து மயங்கி வழியை நோக்கிக்கொண்டே நிற்கும் சுதமதியையும் மாதவியையும் பார்த்து அவர்கள் வியப்படையும் வண்ணம் அவர்களுடைய முற்பிறப்பை மணிமேகலை அவர்களுக்கு அறிவித்தனள். பின்பு, "மானிடயாக்கையாற் பெறுதற்குரிய தவவழியை அறவணவடிகளிடத்தே

இனிப் பெறக் கடவீர். ஆபுத்திரனுடைய கையி லிருந்த அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திர மாகும் இது. இதனைத் தொழுமின்" என்று சொல்லி அதனை அன்புடன் தொழுத அவர்களை அழைத்துக்கொண்டு அறவணவடிகளைத் தரிசித்தற் குச் சென்றாள்.]

---

## கஉ.—அறவணர்த் தொழுத காதை

மணிமேகலை, "அறவணவடிகள் எங்கேயுள் ளார்?" என்று விசாரித்துக்கொண்டுபோய்,

நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவின்
உரைமூ தாள னுறைவிடங் குறுகி (ந - ச)

அவரைத் தரிசித்து மும்முறை பணிந்து துதித்தாள். பின்பு தான் உவவனம் சென்றதும், உதய குமரன் அங்கே வந்து சொல்லிப் போனதும், மணிமேகலா தெய்வம் தன்னை எடுத்துச் சென்று மணிபல்லவத்தில் வைத்ததும், அத்தீவிலுள்ள புத்த பீடிகைக் காட்சியால் தன் பழம்பிறப்பைத் தானறிந்துகொண்டதும்,] "முற்பிறப்பிற் கணவனா யிருந்த இராகுலனே உதயகுமரனாக வந்துபிறந் தான்; அப்பிறப்பில் உனக்குத் தமக்கைமார்க ளாக இருந்த தாரையும் வீரையுமே மாதவியும் சுத மதியுமாக வந்தனர்; அவர்கள் வரலாற்றை அற வணவடிகள்பால் நீ தெரிந்துகொள்" என்று மணி மேகலாதெய்வம் சொல்லி மூன்று மந்திரங்களை உப தேசித்துச் சென்றதும், அப்பால் தீவதிலகை வந்த

தும், அவளுடன் சென்று கோமுகிப் பொய்கையி லிருந்த அமுதசுரபியைப் பெற்றதும், "ஊருக்குச் சென்று அறவணவடிகள்பால் ஆபுத்திரன் வரலாற்றைக் கேள்" என்று அத்தீவதிலகை சொல்லத் தான் வந்ததும் ஆகிய இவற்றை யெல்லாம் தெரிவித்தனள்.

அம்முனிவர் அவற்றைக் கேட்டு மகிழ்ந்து "முன்பு ஒருமுறை நான் பாதபங்கயமலையை வழிபட்டு மீண்டு வருகையில் துச்சயராசனை ஒரு சோலையிற் கண்டேன். 'அரச! நீயும் உன் மனைவியரும் சுகமோ?' என்றுயான் வினவ, அவன் மனங் கலங்கி அரற்றிக்கொண்டு, வீரை மதுவின் மயக்கத்தால் ஒரு யானைமுன்சென்று இறந்ததும் அச்செய்தியைக் கேட்டு வருந்திய தாரை ஒரு மாடத்தின் மீதேறி வீழ்ந்து மரித்ததுமாகிய பெருந்துன்பத்தைக்கூறி வருந்தினன். நான், 'இது பழவினைப் பயனாகும்; ஆதலால் நீ வருந்தாதே' என்று சொல்லிப்போந்தேன். அங்ஙனமிருந்த நீவிர் இப்போது கூத்தரைப்போல வேறு வேடம் பூண்டு வந்தீர்கள்" என்று மாதவியையும் சுதமதியையும் பார்த்துக் கூறினர்.

பின்னும் அவர் மணிமேகலையைப் பார்த்து, "இவ்வுலகிற் பௌத்த தருமங்கள் குறையப் பாவங்கள் மிகுந்தன. ஆனாலும் சிறிது சிறிது தருமம் உண்டாதலுங் கூடுமென்று எண்ணி நான் தருமத்தை உபதேசித்து வருதலுமுண்டு. அத்தருமத்தை இவ்வுலகத்திலுள்ள மாந்தர் அறியார். இவ்

வுண்மையையறிந்த இச்சக்கரவாளத்துள்ள தேவர்களுடைய வேண்டுகோளால், ஆயிரத்தறுநூற்றுப் பதினாரும் ஆண்டில் துஷிதலோகத்திலுள்ள தேவன் இவ்வுலகத்தில் அவதரிப்பான். அதற்குப் பின்பு யாவருக்கும் அருளறத்தில் மனம் செல்லும்.

புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களு ஞாயிறுந் தீங்குறு விளங்கத்
தங்கா நாண்மீன் றகைமையி னடக்கும்
வானம் பொய்யாது மாநிலம் வளம்படும்
ஊனுடை யுயிர்க ளுறுதுயர் காணா
வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படும்
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்
பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா
விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீங்கும்
கலங்களுர் நரகரும் பேயுங் கைவிடும்
கூனுங் குருடு மூமுஞ் செவிடும்
மாவு மருளு மன்னுயிர் பெறாஅ
அந்நாட் பிறந்தவ னருளறங் கேட்டோர்
இன்னாப் பிறவி யிகந்தோ ராதலிற்
போதி மூலம் பொருந்திய சிறப்பின்
நாதன் பாத நவைகெட வேத்துதல்
பிறவி தோறு மறவேன் மடக்கொடி (அசு-௧0௩.)

"இது நிற்க; மணிமேகலையே, இந்நகரத்தில் உன்னாலே சில விசேடங்கள் நிகழும்.

---

இங்கே கூறப்பட்டுள்ள ஆண்டு இன்ன சகாப்தத்தைச் சார்ந்ததென்று புலப்படவில்லை.

அவை நிகழ்ந்த பின்பன்றி யான் கூறும் தரும மொழி உன் மனத்திற் பொருந்தாது. இவ்விருவரும் முற்பிறப்பிற் பாதபங்கயமலையை வழிபட்ட புண்ணிய விசேடத்தால், பிற்காலத்தில் உன்னோடு கூடிப் புத்த தேவரது திருவடியைத் தொழுது வணங்கி வினைகளினின்றும் நீங்கி முத்தியை அடைவார்கள். உயிர்மருந்தாகிய மிகச்சிறந்த அமுதசுரபியை நீ பெற்றனை. எல்லா உயிர்களுடைய பசியையும் அதன் உதவியைக் கொண்டு நீ தீர்ப்பாயாக.

மக்க டேவ ரெனவிரு சார்க்கும்
ஒத்த முடிவி னோரற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்தல்" என்றே யவரும்
தவப்பெரு நல்லறஞ் சாற்றினர் (கககூ - கூ.)

மணிமேகலையும், "அங்ஙனமே செய்வேன்" என்றாள்.

---

## கரு.—ஆபுத்திரன் திறமறிவித்த காதை

பின்பு அறவணவடிகள் மணிமேகலையை நோக்கி, "ஆபுத்திரன் வரலாற்றைக் கூறுவேன்; கேட்பாயாக" என்று கூறத் தொடங்கினார். "வாரணசியென்னும் ஊரில் வேதம் ஓதுவிப்பவனாகிய அபஞ்சிகனென்னும் அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி சாலியென்பாள். அவள் நியமந் தப்பி ஒழுகினமையால் உண்டாகிய பாவத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு, தான் கர்ப்பிணியாக இருந்தும் அதைப் பாராமல் கன்னியா

குமரிக்கு நீராடச் சென்றாள். அப்போது சூலால் வருந்தி வழியிடையே ஒரு குழந்தையைப் பெற்று, அக்குழந்தையிடத்திற் சிறிதும் இரக்கம் வையாமல் அதனை ஒரு தோட்டத்தில் இட்டு நீங்கினள். அப்போது அக்குழந்தை உணவுபெறாமற் பசியால் வருந்தியழுதது. அவ்வழுகையோசையைக் கேட்டு ஒரு பசுவானது வந்து அதன் வருத்தம் தீரும்படி நாவால் நக்கிப் பாலூட்டி ஏழுநாள் வரையும் அப்புறஞ் செல்லாமற் பாதுகாத்து வந்தது.

"அப்படி யிருக்கையில், வயனங்கோடென்னும் ஊரில் உள்ளவனாகிய பூதியென்னும் அந்தணனொருவன் தன் மனைவியோடும் அவ்வழியே வந்தனன். அவன் அக்குழந்தை அழுத குரலைக் கேட்டுச் சென்று தனியே கிடக்கும் அதைக் க்ண்டு மிக்க துன்பத்தோடு கண்ணீர் பெருக்கி, 'இவன் பசுமகனல்லன்; என்மகனே' என்று கூறி அக்குழந்தையை எடுத்து ஊர் சென்று வீடடைந்து மகிழ்ச்சியுடன் வளர்த்து வந்தான். அக்குழந்தை வளர்ச்சி பெறப் பெற உரிய காலத்துத் தன் குலத்திற்குரிய கல்விகளை நன்கு பயிற்றிவந்தான். ஒரு நாள் அச்சிறுவன் அவ்வூரில் ஓரந்தணன் வீட்டிற் புகுந்து, யாகசாலையில் ஒரு பசு மாலையைச் சுற்றிய கொம்புகளை உடையதாய்ப் பின் தனக்குண்டாகும் துன்பத்திற்கு அஞ்சி வெய்துயிர்த்துப் புலம்பி வேடர்களுடைய வலையிற்பட்ட மான்போல் அஞ்சிக் கதறுவதைக் கண்டான். உடனே மனம் நடுங்கிக் கண்ணீர் உகுத்து, 'இவர்கள் அறியாதவண்ணம் இப்

மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவ லின்றெனி னின்றால் (உ௦அ.- கூ);

தன்மகனைப் பூமியிலே கிடத்தி அவன்மீது தேர்க்காலைச் செலுத்தி முறைசெய்த அரசர்பிரானுடைய பரம்பரையில் ஒரு தீவினையாளன் பிறந்தானென்பதை மற்றை அரசர்கள் கேட்குமுன்னம் அவனைப் புறங்காடடைவித்துக் கணிகைமகளாகிய மணிமேகலையையும் சிறைப்படுத்துக" என்றனன். சோழிக வேனாதி அவ்வாறே செய்தான். 17-10-42 St. Xaviers

---

## உரு.—சிறைவிடு காதை

பின்பு, அரசன் கட்டளையால் வாசந்தவை யென்னும் முதியவளொருத்தி, புத்திரசோகத்தாற் கலங்கி வருந்தும் இராசமாதேவியை விரைந் தடைந்து தொழுது முன்னின்று வாழ்த்தி அவளுடைய வருத்தம் நீங்கும்வண்ணம் பல கட்டுரைகள் கூறி ஒருவாறு ஆற்றுவித்துப் போயினள். அவள் போனபின்பு, இராசமாதேவி தன்னுடைய வருத்தம் புறத்தே தோன்றாதவண்ணம் அடக்கிக்கொண்டவளாய், "மணிமேகலையை வஞ்சித்து வருத்துவோம்" என்று எண்ணினாள். அவள் அரசனைச் சார்ந்து, "செங்கோல் வேந்தே! மணிமேகலையின் பிக்குணிக்கோலத்தைக் கண்டு தன்னறிவு வேறுபட்ட உதயகுமரன் அரசாட்சிக்கு உரியவனல்லன்; அவன் அக்கொடுந்தொழிலால் இறந்தது தக்கதே. தனது இளமையைப் பயனற்றதாகச் செய்த பேரறிவுடையவளாகிய மணிமேகலைக்குச் சிறை தகுதி

யன்று" என்றாள். அரசன், "உன் கருத்து அப்படியாயின் அவளைச் சிறையினின்றும் விடுவி" என்று கூறினன்.

கேட்ட இராசமாதேவி அவளைச் சிறையினின்றும் விடுவித்து அழைத்துக்கொண்டு அரண்மனையுட் சென்று, "இவ்வூரிலுள்ளாரெல்லாரும் அடித்து வருத்தும்படி இவளைப் *பித்தியாகச் செய்வேன்" என்றெண்ணி மயக்கும் மருந்தை அவளுக்கு ஊட்டினாள். அவள் மறுபிறப்பு உணர்ந்தவளாதலால் சிறிதும் அறிவு வேறுபடாதிருந்தாள். அப்பால் இராசமாதேவி அறிவிலியாகிய ஓர் இளைஞனை அழைத்து, "இவளுடம்பை எப்படியேனும் வேறுபடுத்தி 'மணிமேகலை என்னை விரும்பினாள்.' என்று பலர்க்கும் சொல்வாயாக" என்று சொல்லிப் பொற்காசுகள் பலவற்றைக் கைநிறைய அவனுக்குக் கொடுத்தாள். அவன் அத்தீச்செயற்கு உடன்பட்டு மணிமேகலை இருந்த இடத்தை அடைந்தான். அவள், 'இவன் வந்தது இராசமாதேவியின் வஞ்சனையால்' என்று நிச்சயித்து வேற்றுருவெய்துவிக்கும் மந்திரத்தை ஜபித்து ஆண்வேடம் பூண்டு அங்கே இருந்தாள். அங்ஙனம் இருந்ததனைக் கண்ட அவ்வறிவிலி நடுநடுங்கி, 'அரசருடைய அந்தப்புரத்தில் ஆடவர் அணுகார்; இராசமாதேவியின் தீயநினைப்பை யான் அறிந்திலேன்' என்று பயந்து அவ்விடத்தைவிட்டு விரைந்து புறத்தே ஓடிப்போயி

* பித்தி - பைத்தியங்கொண்டவள்.

னன். அதன்பின் இராசமாதேவி, 'நம் அருமைப் புதல்வனை மயக்கி மாளச்செய்த இவளை இனி உயிரோடு வையேன்' என்று சினந்து, "நோய்மிகுதியால் இவளுக்கு உணவு செல்லவில்லை" என்று அவள்பாற் பொய்ந்நோயொன்றைக் காட்டி அவளைப் புழுக்கறையில் அடைத்தாள். மணிமேகலை ஊணொழி மந்திரமுடையவளாதலின் அம்மந்திரத்தை ஜபித்துச் சிறிதும் வாட்டமின்றி அவ்வறையிலேயே இருந்தாள்.

அதனைக் கண்ட இராசமாதேவி ஆச்சரியமுற்று நடுநடுங்கி அறிவு வரப்பெற்று அவளை நோக்கி, "மகனையிழந்த பெருந்துன்பம் பொறுக்கலாற்ருது இத்தீங்குகளைச் செய்தேன்; நீ இவற்றைப் பொறுத்தருள வேண்டும்" என்று பலவாறு வேண்டினள். அப்போது மணிமேகலை, "சென்ற பிறப்பில் நீலபதியின் வயிற்றில் தோன்றிய இராகுலனைத் திட்டிவிடமென்னும் பாம்பு உயிருண்டபொழுது அதனைப் பொறேனாகித் தீயிற்பாய்ந்து என்னுடைய உயிரை விட்டேன். அந்நாளில்,

யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
உடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
உடற்கழு தனையே லுன்மகன் றன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
உயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய

தவ்வுயிர்க் கன்பினை யாயி னுய்தொடி
எவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும் (எக - கூ);

[உன் மகனை வித்தியாதரனொருவன் வெட்டி வீழ்த்தியதற்குக் காரணமான தீவினையை இன்னதென்று கூறுவேன்; கேட்பாயாக;] அது முற்பிறப்பில் மடைக்கலம் சிதைய வீழ்ந்த மடைத்தொழிலாளனை வெட்டி வீழ்த்தியதால் உண்டாகிய தீவினையே. அத்தீவினை அப்பிறப்பிலேயே நஞ்சுவிழியரவால் அவனுடைய நல்லுயிரை வாங்கி இப்பிறப்பிலும் விஞ்சையன் வாளால் வெட்டுண்ணச் செய்தது. 'இச்செய்திகளையெல்லாம் நீ எப்படி அறிந்தாயோ?' என்பையாயின், நடந்தது இவ்வாறாகும்" [என்று தான் உவவனஞ் சென்றது முதலிய எல்லாவற்றையும் அவளுக்கு விளங்கக்கூறிப் பின்னும் கூறுவாளாயினள்]:

"நீ மருந்தால் எனக்குப் பித்தேற்றினை; யான் மறுபிறப்புணர்ந்தேனாதலின் சிறிதும் அறிவு பிறழாதிருந்தேன். உன் ஏவலால் கல்லாக்கயவன் என்பால் வர, வேற்றுருவெய்துவிக்கும் மந்திரவலியால் ஆணுருவைக்கொண்டிருந்தேன். யாதொரு நோயுமில்லாத என்னைப் பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறையில் அடைப்பித்தாய்; ஊணொழிமந்திரமுடைமையினாலே அத்துன்பத்தினின்றும் தப்பினேன். நீ சென்ற பிறப்பில் எனக்குக் கணவனாயிருந்த இராகுலனை ஈன்ற தாயாதலின், உனது துக்கத்தைக் களைந்து தீவினையைப் போக்கி உன்னை நல்வழிப் படுத்தற் பொருட்டே ஆகாயவழியே

செல்லுதலையும் வேற்றுருக்கொள்ளுதலையும் யான் நினைந்திலேன். இது நிற்க ; இவ்வுலகத்துள்ளோர்க்குத் துன்பம் தருவனயாவையெனின் காமம், கொலை, கள், பொய், களவென்னும் ஐந்துமாம். இவற்றைத் துறந்தோரே சீலமுடையோராவர்.

செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போர்
அல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யார்" என
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனு ரோதி செவிமுதல் வார்த்து
மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
அகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்ப (௯௨ - ௪௧),

இராசமாதேவி மனம் தெளிந்து மணிமேகலையை வணங்கினள். மணிமேகலை அதனைப் பொறாளாகி, "நீ என் கணவனைப் பெற்ற தாயாக இருத்தலன்றி அரசனுடைய மாபெருந்தேவியாகவும் இருத்தலால் என்னை வணங்குதல் தகுதியன்று" என்று துதித்து அவளைத் தானும் அன்புடன் வணங்கி

## உச.—ஆபுத்திரனுடைந்த காதை

மணிமேகலையை விரும்பிச் சென்ற உதயகுமரன் விஞ்சையனுடைய வாட்படையால் உலகவறவியில் வெட்டுண்டு இறந்ததையும், மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தலையும் சித்திராபதி கேட்டு வருந்தி நடுங்கி அவளைச் சிறையினின்றும் நீக்க நினைந்தாள். இராசமாதேவிபாற் சென்று வணங்கி, "மாபெருந்தேவி! கோவலன் இறந்தானென்று மாதவி தனது பரத்தைமைத் தொழிலை நீத்துத் தவச்சாலையை அடைந்ததும், அவள் மகளாகிய *அரங்கக்கூத்தி பாத்திரமேந்தி வீடுதோறும் சென்று சென்று பிச்சையேற்றதும் யாவரும் அவமதித்துச் சிரித்தற்கு இடமாயினவேயன்றி வேறல்ல. இது நிற்க; உதயகுமரனிறந்ததன்றி, மணிமேகலையால் இனி இந்நகரத்திற்கு உண்டாகும் பெருந்துன்பமொன்றுண்டு; கேட்பாயாக:

"முன்னொருநாள், அரசன் இந்நகரிற் கடற்கரையைச் சார்ந்த புன்னைமரச்சோலையிற் பேரழகினளாகிய ஒரு மங்கையைக் கண்டு விரும்பி அவளோடும் ஒரு மாதம் அச்சோலையில் உறைவானாயினன். அம்மங்கை அவனிடம் சொல்லாது தன்னிடஞ் சென்றாள். உடனே, அரசன் இளங்கொடியாங்கொளித்தனளோவென்று பலவிடத்தும் தேடிக்கொண்டிருந்தான். அப்பொழுது அற்புத சக்தியையுடைய ஒரு சாரணன் வர, அரசன்கண்டு

---

* அரங்கக்கூத்தியென்றது மணிமேகலையை.

அவனை வணங்கி முன்னின்று, 'என் உயிர்போல் பவளாகிய ஒருத்தி இங்கே ஒளித்தனள்; அவளை அடிகள் கண்டதுண்டோ? உண்டாயிற் சொல்லுக' என்று கேட்டனன். அந்தச் சாரணன், 'அரச! அம் மடந்தையை யான் இப்பொழுது கண்டிலேனாயி னும் முன்பு அறிந்துள்ளேன்; கேட்பாயாக. அவள் நாக நாட்டரசனாகிய வளைவணனென்பவனுடைய தேவியான வாசமயிலையென்பவளின் வயிற்றில் தோன்றிய பீலிவளையென்பாள். அவள் பிறந்த நாளிற் சோதிடங் கூறவந்த கணி, 'இவள் சூரிய குலத்தரசனொருவனைச் சேர்ந்து கருவுற்றுவருவாள்' என்று அரசனுக்குக் கூறினன்; இது முன்பு நடந் தது. அவளே நீ கூறிய மடந்தை. இனி, அவள் வயிற்றிற்றோன்றும் மகனே வருவான். அவள் வாராள். நீ கவலாதிருக்கக்கடவை. இன்னும் ஒன்று கேட்பாயாக: இந்திரவிழாச் செய்யாதநாளில் மணி மேகலாதெய்வத்தின் சொல்லால் உன் நகரத்தைக் கடல்கொள்ளும்; இந்திரசாபமும் இருத்தலால் அது தப்பாது. ஆதலால், யான் கூறியதை உண்மை யென்றே நினைந்து இந்நகரைக் கடல்கொள்ளாத படி இந்திரவிழாவை வருடந்தோறும் மறவாது செய்துவருக' என்று சொல்லிவிட்டுப் போயினன். அவன்போன அந்நாள் தொடங்கி, நகரத்திற்கு எப் பொழுது கேடுவந்துவிடுமோவென்று இந்நகரத்தா ரெல்லாரும் நடுங்கிக்கொண்டேயிருக்கின்றனர். தன் னுடைய பெயரைப்பெற்ற மடந்தை துன்பமுறு வாளாயின், அதனைப் பரிகரித்தற்கு மணிமேகலா

தெய்வம் வருதலும் கூடுமோவென்று யானும் அஞ்சாநின்றேன்" என்று சொல்லித் துதித்து, "நல்ல மனமுண்டாகப்பெற்ற நாடகக்கணிகையை என் மனைக்குப் போதரும்படி கட்டளையிடுவாய்" என்று கேட்டனள்.

இராசமாதேவி,

"கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும்
உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை (எஎ - அ)

யாகும்; அந்த ஐந்தையுமே கொண்ட உனது பரத்தைமைத் தொழிலை அசுத்த வழியென்றெண்ணி வந்த இவள் உன்னுடன் வந்து உன்மனையிற் புகுவாளல்லள்; என்னோடுதானே இருத்தற்குரியள்" என்று கூறினள்.

இவர்கள் இவ்வாறு பேசியிருக்கையில் மணிமேகலையின் நிலைமையைக் கேட்ட மாதவி, அதனைச் சுதமதிக்குக் கூறி வருந்திச் சென்று அறவணவடிகளை வணங்கி அறிவித்து அவரை முன்னிட்டுக்கொண்டு அவளைச் சிறைமீட்டற்பொருட்டு இராசமாதேவியிடம் வந்தாள். இராசமாதேவி அவரைக் கண்டவுடன் மற்றை இருவரோடுமெழுந்து எதிர்சென்று அவரடியை வணங்கினள். அவர், "அறிவுண்டாக" என்று ஆசி கூறினர். அப்பால் அவள் அவரைச் சிறந்த ஓராதனத்திலிருத்தி அடிவிளக்கிச் சிறப்புச் செய்து, "எமது நல்வினையே மிகப்பெரியோராகிய தேவரீரை இங்கே எழுந்தருளச் செய்தது;

" நாத்தொலை வில்லை யாயினும் தளர்ந்து
மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டு" (கூகூ - க00)

என்று கூறி உபசரித்தாள். அவர், "யான் இத் தவவுடம்பிற் பொருந்தியிருந்தும் அத்தமிக்கும் சூரியன் போன்றேன் ;

பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றார்
இறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்" (கூ௩ - ச)

என்று பன்னிரு * நிதானங்களையும் அவளுக்கு விளங்க உபதேசித்து, "எப்பொழுதும் நல்லறத்தையே பேணிக் கேட்டு அவ்வாறே யொழுகுக" என்று உரைத்தனர். பின்பு மணிமேகலையை நோக்கி, "மற்றைச் சமயதருமங்களையெல்லாம் நீ கேட்டபின்பு இவற்றையும் இவற்றின் பகுதிகளையும் உனக்கு விளங்க உணர்த்துவேன்" என்று கூறித் தம்மிடஞ் செல்லுதற்கு எழுந்தார்.

அப்பொழுது மணிமேகலை எழுந்து அவரை வணங்கிப் பின்பு இராசமாதேவி முதலியோரை நோக்கி, "அறவணவடிகள்கூறிய உபதேசமொழிகளை மறவன்மின் ; அவர் கூறியவாறே ஒழுகுமின் ; யான் இந்நகரிலிருப்பேனாயின், 'உதயகுமரனுக்கு இவள் கூற்றாயிருந்தாள்' என்று யாவரும் கூறுவர். ஆதலால் இங்கேஇரேன். இனி, ஆபுத்திரனுடைந்து பின்புமணிபல்லவம் சார்ந்து புத்தபீடிகையைத் தரிசித்துவிட்டு, அப்பால் வஞ்சிநகரஞ்சென்று †பத்தினிக் கடவுளைத் தரிசித்தபின் எங்கும் போய் நல்

---

* நிதானம் - ஆதிகாரணம் ; என்றது பேதைமை முதலியவற்றை.
† பத்தினிக்கடவுள் - கண்ணகி.

லறஞ்செய்துகொண்டு ஒழுகா நிற்பேன். எனக்கு இடருளதாகுமோவென்று நீர் சிறிதும் கவலற்க" என்று சொல்லி அவர்களையும் வணங்கிப் புறப்பட்டனள்; சூரியாஸ்தமயத்திற்குப் பின் அந்திமாலைப் பொழுதிலே சென்று, உலகவறவியையும் சம்பாபதியையும் கந்திற்பாவையையும் வலங்கொண்டு துதித்து ஆகாயவழியே பறந்துசென்று, இந்திரனுடைய வழித்தோன்றலாகிய புண்ணியராசனது நகர்ப்புறத்தேயுள்ள சோலைக்குள்ளே இறங்கினாள். அங்கே அயர்வுயிர்த்து ஆங்குள்ள ஒரு முனிவனை வணங்கி, "இந்நகரின் பெயர் யாது? இதனையாளும் அரசன் யார்?" என்று கேட்டாள். அம்முனிவன், "இதன்பெயர் நாகபுரமென்பது; இதனையாள்பவன் பூமிசந்திரன் மகனாகிய புண்ணியராசனென்பான். இவன் பிறந்தகாலந்தொடங்கி இந்நாட்டில் மழை பிழைத்ததில்லை. பூமியும் மரங்களும் பிறவும் எல்லா வளங்களையும் மிகத்தரும்; உயிர்களுக்கு ஒருவகையான நோயுமில்லை" என்று அரசனுடைய பெருமையை அவளுக்கு விளங்கக் கூறினார்.

## உரு.—ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை

அப்பொழுது புண்ணியராசன் தன் பெருந்தேவியோடு அச்சோலையிற் புகுந்து, ஆங்குள்ள தருமசாவகனென்னும் முனிவனை வணங்கி,

மணிமேகலையைக் கண்டாள்

அறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கலும்
சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும்
ஆரிய னமைதியு மறைவுறக் கேட்டு (ந - சு),

அப்பால், "இவள் ஒப்பற்ற பேரழகினள்; கையிற் பிச்சைப்பாத்திரமொன்றை உடையவ்ளாய்த் தருமங் கேட்கிறாள்; யார்?" என்று வினவினன். அருகே நின்ற சட்டையிட்ட பிரதானி அரசனை வணங்கி, "இவளை யொப்பவர் யாருமில்லை. முன் ஒருகாலத்தில் கிள்ளிவளவனோடு நட்புக்கொள்ளுதலை விரும்பிக் காவிரிப்பூம்பட்டினத்திற் சென்றபொழுது, அங்கேயுள்ள அறவணவடிகள் இவள் வரலாறுகளையெல்லாம் விளங்கக் கூறினரென்று முன்னமே நான் உரைத்ததுண்டு; அம்மடந்தையே இவள்" என்று கூறினன். [உடனே மணிமேகலை அரசனைப்பார்த்து, "உன் கையிலிருந்த பாத்திரமே என்கையை அடைந்தது. செல்வத்தால் மயங்கினை போலும்! என் செய்தனை? மணிபல்லவஞ் சென்று புத்த பீடிகையைத் தரிசித்தாலன்றி உனது பழம் பிறப்பின் செய்தியையறியாய். ஆதலால் அரச, அங்கே வருவாயாக" என்று சொல்லிவிட்டு எழுந்து ஆகாயவழியே சென்று சூரியாஸ்தமயத்திற்கு முன்னமே மணிபல்லவத்திலிறங்கி வலங்கொண்டு புத்த பீடிகையைத் தரிசித்தாள்.] அது பழம்பிறப்பை அவளுக்குத் தெரிவித்தது. அதனை யறிந்து வியந்து அவள் அங்கே இருந்தனள்.

புண்ணியராசன் சோலையை நீங்கி நகரிற் புகுந்து தன்னை வளர்த்த தாயாகிய அமரசுந்தரி யைக் கண்டு வினவித் தன் வரலாறு முழுவதையும் அவள் கூறக்கேட்டு வருந்தி அரசாட்சியில் வெறுப் புற்றுத் துறத்தற்குத் துணிந்து தன் கருத்தை வெளியிட்டான். அதனைக்கேட்ட சனமித்திரனென் னும் மந்திரி அவனை வணங்கி,

"எங்கோ வாழி யென்சொற் கேண்மதி (கூகூ);

உன்னை அரசன் பெறுவதன்முன் இந்நாட்டில் பன்னிரண்டு வருடம் மழையில்லாமற் போயிற்று; வறுமை மிக்கது. அதனால் எல்லாவுயிர்களும் வருந் தின. அக்காலத்தில் நீ தோன்றினை. தோன்றிய பின் இந்நாட்டில் எல்லா வளங்களும் நிரம்பின. உயிர்கள் துயரம் நீங்கி வாழ்வனவாயின. நீ நீங்குவா யாயின், எல்லாவுயிர்களும் தாயைப் பிரிந்த குழந் தைகளைப்போலக் கூவாநிற்கும். இந்த நிலையை யுடைய உலகத்தைக் காவாமல் உனது பயனையே விரும்பிச் செல்லுதல் தகுதியன்று.

தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பும்
மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றால்" (கககூ - எ)

என்று கூறினன். அரசன் (கேட்டு) "மணிபல்ல வத்தை வலங்கொள்ளவேண்டு மென்று எனக்குண் டாகிய வரம்புகடந்த ஆசை தணித்தற்கு அரியது. ஆதலால் அங்கே போய்வருவேன் ஒருமாதகாலம் இந்நகரைப் பாதுகாத்தல் உனது கடன்" என்று கூறிப் புறப்பட்டு வழிக்கொண்டு கடற்கரையைச்

சார்ந்த நாவாயேறி மணிபல்லவத்தை அடைந்தான்.

மணிமேகலை அவன்பால் வந்து அழைத்துச் சென்று அவனோடு அத்தீவை வலம்வந்து, "பழம் பிறப்பை யுணர்விக்கும் தருமபீடிகை இது" என்று காட்டினாள். அரசன் அதைத் தரிசித்து வலங் கொண்டு துதித்தான். துதிக்கவே அப்பீடிகை பழம்பிறப்பின் செய்தியை அவனுக்கு விளங்கத் தெரிவித்தது. அதனை அறிந்து வியப்புற்றுத் தனக்குப் பழம்பிறப்பில் அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரத்தை அளித்த சிந்தாதேவியைத் துதித்து மணிமேகலையோடும் எழுந்து தென்மேற் கிற் சென்று கோமுகிக் கரையில் புன்னைமரத்தின் நிழலிலே இருந்தான். அப்போது ஆபுத்திரனோடு மணிமேகலை வந்திருத்தலைத் தீவதிலகை அறிந்து வந்து, "அமுதசுரபியைக் கையிலேந்தி உயிர்களின் பெருந்துயரத்தைத் தீர்த்த பெரியோனே, அக் காலத்தில், மறந்து உன்னை இத்தீவில் தனியே விட்டுவிட்டுக் கப்பலேறிச்சென்று, பின்பு உன்னை நினைந்து மீண்டுவந்து இங்கே நீ இறந்திருத்தலை அறிந்து உடனே தம்முயிரை நீத்த ஒன்பது செட்டி களின் உடலென்புகள் இவை; காண்பாயாக. அச் செட்டிகள் உண்பிக்க உண்டு உடன் வந்தோர்கள் அவர்கள் இறந்தது தெரிந்து தாங்களும் இறந்தார் கள். அவர்களுடைய என்புகள் இவைகளே அலைகள் தொகுத்த மணலால் மூடப்பட்டுப் புன்னை

நிழலின் கீழே உனது பண்டையுடம்பு இருந்ததைப் பார்ப்பாயாக.

> நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
> பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
> கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை" (கஎஉ - ச) .

என்று அரசனை நோக்கிக் கூறினள். பின்பு மணிமேகலையைப் பார்த்து, "காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொண்டது; அதற்குக் காரணம் கேட்பாயாக. நாகநாட்டரசன் மகளாகிய பீலிவளையென்பவள் தான் பெற்ற குழந்தையுடன் வந்து இத்தீவையும் புத்த பீடிகையையும் வலம் வந்து துதித்தனள். அப்பொழுது கம்பளச் செட்டியின் கப்பல் வந்து தங்கவே, பீலிவளை அவனிடஞ்சென்று, 'இவன் அரசன் புதல்வன்; இவனை அவனிடஞ் சேர்ப்பாயாக' என்று சொல்லிக் குழந்தையை அவன் கையிற் கொடுத்தனள். அவன் பெருமகிழ்ச்சியடைந்து வாங்கிக் கப்பலேறிச் செல்லுகையில் கப்பல் உடைந்து போயிற்று. கப்பலில் இருந்தோரிற் சிலர் மெல்லப் பிழைத்துச் சென்று காவிரிப் பூம்பட்டினத்தை அடைந்து புதல்வனைக் கெடுத்த செய்தியை அரசனுக்குத் தெரிவித்தனர். அது கேட்டு அவன் மனம் பொறாமற் செயலற்றுக் கடற்கரையை யடைந்து மகனைத் தேடிக்கொண்டு அலைந்தமையால், நகரம் இந்திரனுக்கு விழாச் செய்தலை விட்டொழிந்தது. அதனைப் பொறாமல் மணிமேகலாதெய்வம், 'இந்நகரைக் கடல்கொள்ளுக'

என்று சபிக்கக் கடல் நகரை மூடியது; அரசன் வேறிடஞ் சென்றான். அறவணவடிகளோடு மாதவியும் சுதமதியும் யாதொரு வருத்தமுமின்றிப் போய் வஞ்சிநகரம் புகுந்தார்" என்று சொல்லிப் போயினள். அவள் போனபின்பு புண்ணியராசன் அவ்விடத்தே மணலைத் தோண்டி அங்கே தோன்றிய தன்னுடைய பழைய உடம்பின் என்பைக் கண்டு மயக்கமுற்றான். மணிமேகலை அவனைத் தேற்றித் தருமோபதேசஞ் செய்து அவனை நகரத்திற்கு அனுப்பிவிட்டுத் தான் வஞ்சி நகரம் செல்ல நினைந்து ஆகாயத்தில் எழுந்தாள். 31-10-42

A. Xavier

---

## உகூ.—வஞ்சிமாநகர் புக்க காதை

மணிமேகலை ஆகாயவழியே சென்று வஞ்சி நகர்ப்புறத்தே இறங்கினள். தாய் கண்ணகியையும் தந்தை கோவலனையும் தரிசிக்க வேண்டுமென்ற ஆசை அவளைத் தூண்டியது. அதனால் கோயிலிற் புகுந்து கண்ணகியை வணங்கித் துதித்து, "கணவனிறந்தது தெரிந்து உடன் இறவாமலும் கைம்மை நோன்பை நோலாமலும் சினங்கொண்டு மதுரையை அழித்ததற்குக் காரணம் கூறியருளவேண்டும்" என்று பிரார்த்தித்தனள். பத்தினிக்கடவுளாகிய கண்ணகி, "என் தலைவனுக்கு நேர்ந்த மரணத்துன்பத்தைப் பொறுக்க முடியாமையால், மதுரையை எரித்தழிக்கத் தொடங்கினேன். அப்

பொழுது மதுராபதியென்கிற அந்நகரத் தெய்வம் எனக்கு முன்னே தோன்றி, 'இத்துன்பத்தை நீங்கள் அனுபவித்தல் முற்பிறப்பிற்செய்த தீவினையினலேயே; அதனைக் கூறுவேன்; கேட்பாயாக' என்று எங்கள் பழைய வரலாற்றைக் கூறத்தொடங்கியது :

"'முன்பு கலிங்கநாட்டிலுள்ள சிங்கபுரத்தரசனாகிய வசு என்பவனும் கபிலபுரத்தரசனாகிய குமரனென்பவனும் தம்முட் பகைமைகொண்டு போர் செய்வாராயினர். அப்பொழுது மனைவியுடன் சிங்கபுரத்துக் கடைவீதியிற் சென்று பண்டம் விற்றுக் கொண்டிருந்த சங்கமனென்னும் வணிகன்பாற் பொறாமையுற்று, அந்நகரத்தரசனிடம் வேலைபார்த்துக் கொண்டிருக்கும் பரதனென்பவன், 'இவன் பகைவனுடைய ஒற்றன்' என்று அரசனுக்குச் சொல்லி யாதொரு குற்றமுமில்லாத அச்சங்கமனை அவ்வரசனைக்கொண்டு கொலைசெய்வித்தான். சங்கமன் மனைவி நீலியென்பவள் அதனைத் தெரிந்து ஏங்கி அழுது பெரிய மலைமீதேறி வீழ்ந்து உடம்பைத் துறக்க நிச்சயித்து, 'எமக்குத் துன்பஞ்செய்தோர் மறுபிறப்பில் இத்துன்பத்தையே அடைவாராக' என்று சபித்துவிட்டு இறந்தாள். அப்பரதனே கோவலனாகப் பிறந்தான். அவ்வினையால் இத்துன்பம் அடைந்தீர்கள். பழம்பிறப்பிற் செய்த வினையின் பயனை யாரும் நுகர்ந்தே ஒழித்தல்வேண்டும்.'

"இங்ஙனம் அத்தெய்வம் உண்மைமொழியைக் கூறியது. கூறியபின்னும் என் கோபம்

அடங்காமையால் நகரத்தை எரித்து அழித்தேன். முன்பு செய்த நல்வினையாலே நானும் என் கணவனும் தேவர்களாகிச் சென்றோம். இந்நல்வினையின் இறுதியிற் கோபத்தால் உண்டாகிய பாவப்பயனை நுகர்தல் கூடும். இப்படிப் பிறந்தும் இறந்தும் புண்ணியத்தின் இறுதியிற் பாவப்பயனையும் பாவத்தின் இறுதியிற் புண்ணியப்பயனையும் நுகர்ந்து நுகர்ந்து உழலாநிற்போம். அப்பால் மகதநாட்டிற் கபிலையம்பதியிற் புத்தஞாயிறு உதித்துப் போதிமரத்தின் அடியில் எழுந்தருளியிருந்து நால்வகைச் சத்தியங்களையும் அறிந்து பன்னிரண்டு சார்புகளின் தோற்றங்களையும் அவற்றின் அழிவையும் விளங்கக்கூறி இச்சக்கரவாளம் முழுவதும் தருமவொளியை வீசுங் காலத்தில், யாம் அவ்வுபதேசமொழிகளைக் கேட்டுத் துறந்து நிருவாணமடைவோம். இப்பயனை நாம் அடைதற்குக் காரணம், முன்பு காவிரிப்பூம்பட்டினத்திற் புத்தசைத்தியத்திலுள்ள இந்திரவிகாரம் ஏழினையும் உன் தந்தையுடன் ஏத்திய புண்ணியமே. யாம் நிருவாணத்தை யடைவது பலநாளைக்குப் பின்பேயாயினும், அதுகாறும் பலவகையாகிய சித்திகளையும் செய்துகொண்டிருப்போம்.

"நீ இந்நகரிலுள்ள பல சமயவாதிகள் கூறும் கொள்கைகளையெல்லாம் கேட்பாய். அவற்றுள் ஒன்றும் உனக்கு உண்மையென்று தோன்றாது. பின்பு பௌத்த சமயத்தை மேற்கொண்டு விளங்குவாய்" என்று சொன்னவுடன், மணிமேகலை வணங்கினாள். அப்பால் வேற்றுருவை எய்துவிக்கும் மந்திரத்தை

ஜபித்து ஒரு முனிவனது வேடங் கொண்டனள்; பிறகு,

> தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
> பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
> நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
> நன்னெறி காணிய தொன்னூற் புலவரும் (எஉ-ரு)

எங்கணும் விளங்கிய வஞ்சியம்பதியில், செங்குட்டுவனென்னும் சேரர் பெருமானது புகழ் விளங்கும் படி சென்று புகுந்தாள்.

## உஎ.—சமயக்கணக்கர் தம் திறம் கேட்ட காதை

வஞ்சிநகரத்திலே புகுந்த மணிமேகலை சமய வாதிகள் பலருடைய கொள்கைகளையும் அறிய விரும்பினாள். அவர்களுள்ளே வைதிக வழியைச் சார்ந்த அளவைவாதியை முதலில் அடைந்து, "உன் கொள்கையை உரை" என்று வினவினாள். அவன் தன் கோட்பாட்டைக் கூறினன். அதனைக் கேட்டுப் பின் சைவவாதியையும், அப்பாற் பிரம வாதியையும், பிறகு வைணவ வாதியையும், பின்பு வேத வாதியையும், பின்னர் ஆசீவகவாதியையும், அப்பால் நிகண்ட வாதியையும், பின் சாங்கிய வாதியையும், அதன்பின் வைசேடிக வாதியையும், பின்பு பூதவாதியையும் சார்ந்து சார்ந்து வினவி வினவி அவரவர் தம் தம் கொள்கைகளைக் கூறக் கேட்டு அவற்றை அறிந்துகொண்டாள்.

## ௨௮.—கச்சிமாநகர் புக்க காதை

அதன்பின், மாதவியையும் சுதமதியையும் அறவணவடிகளையும் காண விரும்பிய மணிமேகலை புறநகரத்தைக் கடந்து சென்று வஞ்சிநகரத்தினுள்ளே சென்றனள். அங்கே பலவகைச் சாதியாரும் இருத்தற்குரிய வீதிகளையும் வேறுள்ள பல இடங்களையும் முறையே கண்டு மகிழ்ச்சியுற்றுச் செல்வாளாயினள்; அவற்றைக் கடந்து பௌத்த தருமங்களைச் சொல்லும் முனிவர்கள் தங்கியிருக்கும் தவச்சாலையிற் புகுந்து அங்கே தவஞ்செய்து கொண்டிருந்த மாசாத்துவானைப் பணிந்தாள்; எடுக்க எடுக்க உணவு வளரும் அமுதசுரபியின் விசேடத்தையும், அப் பாத்திரத்தைக்கொண்டு செய்த தானவிசேடத்தால் ஆபுத்திரன் புண்ணிய ராசனாகப் பிறந்து சாவகநாட்டை ஆண்டு வரும் பெருமையையும், தான் அவனை மணிபல்லவத்திற்கு அழைத்து வந்து புத்தபீடிகையைக் காட்டப் பழம்பிறப்புணர்ச்சியை அவன் பெற்றதையும், தீவதிலகை வெளிப்பட்டதையும், காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்கொண்டமையால் மாதவியும் சுதமதியும் அறவணவடிகளும் சாதலின்றி அந்நகரில் வந்து புகுந்தார்களென்று தான் தீவதிலகைபாற் கேட்டதையும், புண்ணியராசன் நாகபுரஞ்செல்லத் தான் மணிபல்லவத்தை விட்டு வந்ததையும், தாயாகிய கண்ணகியைத் தரிசித்தது முதலியவற்றையும் பின் வேற்றுருக் கொண்டு பல சமயவாதிகளைச்

சார்ந்து அவர்களுடைய கொள்கைகளைக் கேட்டதை யும், அக்கோட்பாடுகளெல்லாம் பொருத்தமில்லா மையால் தான் அவற்றை மனங்கொள்ளாததையும், பௌத்த தருமத்தைக் கேட்க விரும்பி அறவணவடி களைத் தேடிக்கொண்டு வந்ததையும் அவனுக்கு விரி வாகச் சொன்னாள்.

அவற்றையெல்லாம் கேட்ட மாசாத்துவான், "உன்னை நான் கண்டது எனது நல்வினையாலேயே. உன் தந்தை கோவலனும் தாய் கண்ணகியும் அடைந்த வருத்தங்களும் மதுரையம்பதி அழிவுற்ற தும் ஆகிய இவற்றைக் கேள்வியுற்று எல்லாவற்றை யும் துறந்து பௌத்தமதத்தைச் சார்ந்து தவம் செய்தலை மேற்கொண்டேன். யான் இங்கே வந்த தற்குக் காரணம் கேட்பாயாக:

"முற்காலத்தில் இந்நகரை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனென்னும் ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவன் ஒருசமயம் தன் தேவிமாரோடும் இச்சோலையைச் சார்ந்து இருந்தான்; அப்பொழுது, இலங்கா தீவத்துள்ள சமனொளியென்னும் மலையை அடைந்து புத்தபாதப் படிமத்தைத் தரிசித்து வலங் கொண்டு ஆகாய வழியே மீள்வோராகிய சாரணர் இச்சோலையில் இறங்கி ஒருசிலாதலத்தில் இருந்தார். அங்ஙனம் இருக்கக் கண்ட அரசன் உபசரித்து அமுதுசெய்வித்துத் துதிக்க அவர்கள்,

பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமும்
அறத்தகை முதல்வ னருளிய வாய்மை
இன்ப வாரமு திறைவன் செவிமுதல்
துன்ப நீங்கச் சொரியு மந்நாள் (கககூ - உஉ)

நின் தந்தைக்கு ஒன்பது தலைமுறை முன்னோனாகிய கோவலனென்பவன் அவ்வரசனுக்குக் காதற் பாங்கனாதலால், இங்கே வந்திருந்து அச்சாரணர் அரசனுக்குக் கூறிய அறமொழிகளை யெல்லாம் கேட்டு மிகவும் மனம் உருகினான். தான் ஈட்டிய பல கோடி தனங்களையும் முன்னோர்கள் தருமவழியே தேடிய பொருள்கள் பலவற்றையும் ஏழுதினங்களுள் இரவலர்க்குக் கொடுத்துவிட்டு அப்பால் தவஞ்செய் வானாயினன். அவன் அக்காலத்தில் புத்ததேவனுக் குக் கட்டுவித்த சைத்தியத்தைத் தரிசித்தற்காகவே நான் இங்கு வந்தேன். காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் விழுங்கிவிடும் என்ற செய்தியை ஈண்டுள்ள முனிவர்கள் துணிந்து கூறக்கேட்டு அந்நகரம் செல் லாமல் இவ்விடத்திலேயே இருந்துவிட்டேன். தீவினை யுடைமையாற் கொலையுண்டிறந்த உன் தந்தை நல் வினையால் தெய்வயாக்கையைப் பெற்றுப் பின்னும் தீவினைப்பயனை அனுபவிப்பான்; அப்பால் புத்த தேவன் அவதரித்துச் செய்யும் தருமோபதேசத் தைக்கேட்டு வீடடைவானென்று அறிந்தோர் கூறக் கேட்டேன். நானும் அக்காலத்தில் அவ்வறமொழி களைக் கேட்பேன். உனது பிறகாலச்செய்திகளை நீ கந்திற்பாவையால் அறிந்தாயென்று அறவணவடி கள் கூற அறிந்தேன். அம்முனிவர் உனக்குத் தரு மோபதேசஞ் செய்தற்கு அமைந்தவிடம் காஞ்சிநகர மென்று எண்ணி இங்கிருந்து அங்கே சென்றார். மாதவியும் சுதமதியும் அவருடன் அந்நகரம் போயி னர். இன்னும் கேட்பாயாக: [மழையில்லாமையாற்

காஞ்சிநகரத்தில் மிக்கவறுமை உண்டாயிற்று. பல உயிர்கள் இறந்தன. அந்நகரில் ஐயமிடுவோர் இல்லாமற் போனமையால் அங்கேயிருந்த முனிவர்கள் இவ்விடம் வந்துவிட்டார்கள். ஆதலால், அங்கே சென்று எல்லாவுயிர்களையும் பாதுகாத்தல் உனது கடனாகும்" என்று கூறினான்.

மணிமேகலை அவனை வணங்கி அமுதசுரபியைக் கையிலேந்தி வஞ்சிநகரத்தின் மேற்றிசையினின்றும் மேலேயெழுந்து ஆகாயவழியே வடதிசைக்கண்ணே சென்று செல்வங் குன்றி வறுமையுற்று அழகு கெட்டுப்போயிருக்கும் காஞ்சி நகரத்தை அடைந்தாள். அதனைக் கண்டு மனமிரங்கி வலம்வந்து அந்நகரின் நடுவே இறங்கி அங்கே தொடுகழற்கிள்ளியின் துணைவனாகிய இளங்கிள்ளியாற் கட்டுவிக்கப்பட்டுள்ள புத்தாலயத்தை வணங்கி அதன் தென்மேற்கேசென்று ஒரு சோலையில் தங்கினள். அச்செய்தியைத் தெரிந்த ஒருவன் விரைந்துசென்று அரசனை வணங்கி, "அரச, கோவலன் புதல்வி சிறந்த தவஞ்செய்தொழுகுபவள்; இச்சம்புத்தீவில் எல்லாருள்ளும் சிறந்தவள்; அவள் கையிலேந்திய அமுதசுரபியென்னும் பாத்திரத்தோடு இந்நகரில் வந்து தருமதவனத்தே உறைகின்றாள்" என்றான். அதுகேட்ட அரசன் கந்திற்பாவை தனக்கு முன்பு கூறியது உண்மையேயென்று மதித்து அத்தெய்வத்தை வந்தித்து மந்திரிகளுடன் விரைந்து சென்று மணிமேகலையை அடைந்தான். அவளைப் பணிந்து நோக்கி,

"'செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம்
அலத்தற் காலை யாகிய தறியேன் (கஅஅ - கூக.)

இனிச்செய்வது யாது?' என்று மயங்கிக்கொண்டிருந்தேன். இருந்தபொழுது ஒரு பெரிய தெய்வம் எனக்கு முன்னே வந்து, 'நீ வருந்தற்க; உனது நல்வினையால் ஒரு மடந்தை இங்கே தோன்றுவாள்; அவளுடைய கையிலுள்ள தெய்வப் பாத்திரத்திலிருந்து எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும் வளருகிற உணவால் இவ்வுலகமெல்லாம் உய்யும்; அவளுடைய கருணையால் மேகமும் மழையை மிகப் பொழியும். அவள் இந்நகரத்திற்கு வந்தபின்பு உண்டாகும் அற்புதச்செயல்கள் பலவாம். கார்வறங் கூரினும் நீர் வறங்கூராது. அவள் வந்திருத்தற்காகக் கோமுகியென்னும் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவமென்னும் தீவும் இங்கு வந்தன வென்று சொல்லும்படி, இந்நகரவீதியில் ஒரு பொய்கையையும் அதனைச் சூழ ஒரு சோலையையும் உண்டு பண்ணுக' என்று சொல்லிவிட்டுப் போயிற்று. அத்தெய்வம் போனபின்பு அது கட்டளையிட்டபடியே செய்து வைத்தவை இவை" என்று சொல்லி அவ்விடத்தைக் காட்டினன்.

மணிபல்லவம் போன்ற அச்சோலையை மணிமேகலை அடைந்து அதனையும் பொய்கையையும் கண்டு மகிழ்ச்சிகொண்டு, தனது பழம்பிறப்பை அறிவுறுத்திய புத்தபீடிகையை அச்சோலையில் இயற்று

வித்தனள்; தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தையும் வழிபடுதற்குரிய கோயிலையும் அங்கே உண்டாக்கினள்; நித்திய பூசையையும் திருவிழாவையும் அரசனைக் கொண்டு செய்வித்தனள்; அவற்றை வந்தித்துத் துதித்து மேற்கூறிய புத்தபீடிகையில் ஆருயிர்மருந்தென்னும் அமுதசுரபியை வைத்து உண்ணுதற்கு எல்லா உயிர்களையும் வருகவென்று அழைத்தனள். அப்போது,

மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
காணார் கேளார் கான்முட மானோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூ றாயிரம் விலங்கின் றொகுதியும்
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி (உஉக - எ)

உண்ணவுண்ண, அவ்வுணவு மேன்மேலும் பெருகிப் பசித்துன்பத்தை அகற்றி விளங்கியது. அப்புண்ணிய விசேடத்தால் எங்கும் மழை பெய்தது; வளங்கள் மிகுந்தன.

இப்படி நிகழுங் காலத்தில், அறவணடிகள் அந்நிகழ்ச்சிகளைக் கேட்டு மாதவியோடும் சுதமதியோடும் அறச்சாலையை அடைந்தனர். மணிமேகலை விரைந்து அவர்பாற் சென்று அன்புடன் வணங்கி அவரடிகளை விளக்கி ஆதனத்தில் இருத்தி அறுசுவைப்போனகம் அமுது செய்வித்து, "யான் செய்த புண்ணியம் தப்பாது பலித்திடுக" என்று சொல்லி மீண்டும் வணங்கினள்.

## உக.—தவத்திறம் பூண்டு தருமங் கேட்ட காதை

தம்மை வணங்கிய மணிமேகலையை அறவண வடிகள் வாழ்த்தி, "பீலிவளை பெற்ற குழந்தையைக் கம்பளச் செட்டி கடலிற் கெடுத்தது தெரிந்த அரசன் வருத்தமுற்று அக்குழந்தையைத் தேடியலைந்தமையாற் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நடத்தப்படாமற் போயிற்று. மணிமேகலாதெய்வம் அது தெரிந்து, 'நகரைக் கடல்கொள்ளுக' என்று சபித்தது. இந்திரனும் சபித்தான். அதனால் அந்நகரம் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் உன் தாயும் யானுமாக உன் பொருட்டு இந்நகரம் அடைந்தேம்" என்று கூறினர்.

மணிமேகலை அவருடைய அடியிணையை வணங்கி, "மணிபல்லவத்திற் புத்த பீடிகையைக் காத்துக் கொண்டிருக்கும் தீவதிலகை யென்பவளும் இச் செய்தியைச் சொன்னாள். நான் வேற்றுருக் கொண்டு சென்று வஞ்சிநகரமடைந்து ஆங்குள்ள பல சமயவாதிகளிடம் அவர்கள் சமயக்கொள்கைகளைக் கேட்டேன். அவர்கள் கூறிய கொள்கைகள் யாவும் மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றையும் முன்பு கொண்டிருந்த வேற்று வடிவத்தையும் துறந்து இந்நகரமடைந்து நும்மைச் சரண்புக்கேன். தேவரீர் அடிச்சிக்கு உண்மைப் பொருளை உணர்த்தியருளவேண்டும்" என்று பிரார்த்தித்தனள். அவர் பிரத்தியக்ஷம் அனுமானம் என்னும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின் போலி வகைகளையும் உண்மை யறிவுண்டாவதற்குக் கருவியாக அவளுக்கு விளங்கக் கூறியருளினர்.

## ௩௦. பவத்திறமறுகெனப் பாவைநோற்ற காதை

தானஞ் செய்தலை மேற்கொண்டு சீலத்தில் முதன்மையாக நின்று பழம்பிறப்பின் உணர்ச்சியையடைந்த மணிமேகலை அப்பால், 'புத்தம் சரணங் கச்சாமி', 'தர்மம் சரணங் கச்சாமி', 'ஸங்கம் சரணங் கச்சாமி' என்பவற்றை மூன்றுமுறை சொல்லி மும்மணிகளையும் மூன்றுமுறை வணங்கி அறவணவடிகளைச் சரணுகதியாக அடைந்தாள். அப்போது அவர் பௌத்த தருமத்தை அவளுக்கு உபதேசிக்கத் தொடங்கினர் :

"இதனைக் கேட்பாயாக: உயிர்களெல்லாம் அறிவில்லாமல் இருந்தகாலத்தில் தேவர்கள் பிரார்த்திக்கத் துடிதலோகத்தினின்றும் இவ்வுலகில் அவதரித்து அரசமரத்தினடியிலே இருந்து தத்துவத்தை ஆராய்ந்தறிந்து மாரனைவென்று முக்குற்றங்களையும் அறுத்து விளங்கிய புத்ததேவன் அருளிச்செய்த இன்பமயமாகிய கட்டுரையாகும் இது. பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற்ற புத்தர்கள் கருணை மிகுந்து திருவாய்மலர்ந்தருளியது இதுவே" என்று சொல்லி, பேதைமை முதலிய பன்னிரு நிதானங்களின் தோற்றவொடுக்கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்து, "உன் மனத்திருள் நீங்குக" என்று கூறி ஞான தீபத்தை நன்கு காட்டினர்.

மணிமேகலை அவ்வுபதேச மொழிகளைக் கேட்டு ஐயந்திரிபற உணர்ந்து, "பிறவித்துன்பம் ஒழிவதாக" என்று அந்நகரிலேயே நோற்றுக்கொண்டிருந்தாள்.]

10-11-42

St. Xavier's

# அரும்பத முதலியவற்றின் அகராதி *

[எண்—பக்க எண்]

அகத்தியர்: தெய்வ முனிவர்களில் ஒருவர்.

அகலம் - மார்பு, 26.

அங்கநாடு - அச்சயனென்னும் அரசனுடைய நாடு.

அசலன்: பசு வயிற்றிற் பிறந்த ஒரு முனிவன்.

அசோதரம்: இரவிவன்மனென்னும் அரசனுடைய நகரம்.

அஞர் - துன்பம், 40.

அத்திபதி: நீலபதியின் கணவன்; இராகுலன் தந்தை.

அதிட்டித்தல் - சேர்தல், 24.

அந்தரம் - ஆகாயம், 57.

அபஞ்சிகன்: காசியிலுள்ள ஓரந்தணன்; சாலி யென்பவளுடைய கணவன்.

அம்பலம் - பொதுவாகியசபை, 3.

அமர சுந்தரி: பூமிசந்திரனுடைய மனைவி; புண்ணிய ராசனை வளர்த்தவள்.

அமுத சுரபி: தென் மதுரையிற் கலா நியமத்துள்ள சிந்தா தேவியால் ஆபுத்திரனுக்குக் கொடுக்கப்பட்ட தெய்வத் தன்மை யுள்ள ஒரு பாத்திரம்; இது தன்னுட் பெய்த அன்னத்தை எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும் வளரச் செய்வது.

அமுதபதி: இரவிவன்மனென்னும் அரசன் மனைவி; தாரை, வீரை, இலக்குமி என்பவர்களைப் பெற்றவள்.

அர்ச்சுனன், 9.

அரங்கு - சபை, 3.

அருவப் பிரமகணங்கள் - அருபத்தை யுடைய நான்குவிதமான பிரஹ்மஜாதி கணங்கள்; உலகம் முப்பத்தொன்றனுள் 28 - ஆவதான ஆகாசாநந்தியாயதன லோக முதலிய நான்கு உலகங்களிலும் உள்ளவர்கள், 21.

அருளறம் - தயா தர்மம், 15

அல் - இரவு, 1.

அல்லல் - வறுமைத்துன்பம், 85.

அல்லறம் - பாவம், அறமல்லாதது, 54.

அலத்தற்காலை - வறுமைக் காலம், 103.

அலத்திறம் - தீய செய்கை, 23.

அவலம் - வருத்தத்தால் உண்டாகும் சோர்வு, 11.

அவலித்தல் - சோர்வுறுதல், 75.

அளவை - பிரமாணம், 98.

அறக்கதிராழி- தர்மசக்கரம், 15.

அறக்கோட்டம் - தர்மசாலை, 61.

அறத்தகை முதல்வன் - புத்த தேவன், 100.

அறம்பாடு - தருமத்தின் தோற்றம், 29.

அறவணவடிகள்: காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த புத்த சங்கத்துள்ள ஒரு முனிவர்; கோவலன் கொலையுண்டதால் வருந்திய மாதவிக்குத் தரும உபதேசஞ் செய்து துறவு

* இப்பகுதியில் அரும்பதங்களின் பொருளும் சிறப்புப் பெயர்களின் விளக்கமும் உள்ளன.

பூணச் செய்தவர்; பாதபங்கய மலையைத் தாம் தரிசித்ததோடு துச்சயனென்னும் அரசனையும் மனைவியரோடு அதனைத் தரிசிக்கச் செய்தவர்; மணிமேகலைக்கு ஆபுத்திரன் வரலாற்றையும் அமுதசுரபியின் பெருமையையும் கூறி அவளை நல்வழிப்படுத்திய ஆசிரியர்; காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் கொண்ட பிறகு வஞ்சி நகரத்திலும் காஞ்சி நகரத்திலும் இருந்து தவம்செய்தவர்; மிக மூப்புற்றும் சொல் வன்மை சிறிதும் குன்றாது இருந்தனர்.

அறவாழி - தரும சக்கரம், 16.

அறைதல் - சொல்லுதல், 1.

ஆணை - கட்டளை, 7.

ஆதிரை: சாதுவன் மனைவி; ஒப்புயர்வில்லாக் கற்பினள்.

ஆபுத்திரன்: சாலியின் புதல்வன்; பிறந்த நாள் தொடங்கி ஏழு நாளளவும் ஒரு பசு பாலூட்டி வளர்க்க வளர்ந்தமையால், இவன் இப்பெயர் பெற்றான்; அன்பும் அருளுமுடையவன்.

ஆயிர வாரத்தாழியன் - பாதத்தில் ஸகஸ்ரார சக்கர ரேகையை யுடையவன்; புத்தன், 16.

ஆரியன் - ஆசிரியன், 91.

ஆற்றா மாக்கள் - வறியவர், 36.

ஆற்றுநர் - பிரதி யுபகாரஞ் செய்பவர், 36.

இசை - புகழ், 36.

இடவயம்: அத்திபதி யென்னும் அரசனுடைய நகரம்.

இடுதல் - கொடுத்தல், 58.

இடும்பை - துன்பம், 60.

இந்திர விகாரம்: இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு, 97.

இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்: ஒரு சேரன், 100.

இரத்தின தீவம்: மணி பல்லவத்தின் அயலிலுள்ள ஒரு சிறு தீவு; இலங்கா தீவமென்றும் கூறப்படும்; இதில் புத்தரது பாதப் படிமை அமைக்கப்பெற்ற உச்சியை யுடைய மலை யொன்றுண்டு.

இரவி வன்மன்: அசோதர நகரத்து அரசன்; அமுதபதியின் கணவன்; இலக்குமி முதலியவர்களின் தந்தை.

இராகுலன்: அத்திபதி யென்னும் அரசனுக்கு நீலபதி வயிற்றிற் பிறந்தவன்; இலக்குமியின் கணவன்; திட்டிவிடமென்னும் பாம்பால் இறந்து பின்பு உதயகுமரனாகப் பிறந்தவன் இவனே.

இராசமாதேவி: மாவண் கிள்ளியின் பட்டத்துத் தேவி, 62.

இருக்கை - இருப்பிடம், 11.

இருத்தி - சித்தி, 72.

இலக்குமி: இரவிவன்மனுக்கு அமுதபதி வயிற்றிற் பிறந்தவள்; தாரை வீரை என்பவர்களின் தங்கை; இராகுலனுடைய மனைவி; திட்டிவிடத்தாற் கணவனிறந்தவுடன் தீப்பாய்ந்து உயிரை நீத்தவள்; சாது சக்கரனென்னும் முனிவனுக்கு உணவளித்த புண்

கோடு-வீணையின் ஓர் உறுப்பு, 9.
கோணிலை - நவக்கிரகங்களின் நிலை, 23.
கோதமை : ஒரு பார்ப்பனி; சார்ங்கல னென்பவனுடைய தாய்.
கோமுகி : மணிபல்லவத்துள்ள தொரு பொய்கை.
கோல் - செங்கோல், 23.
கோவலன் : இப் பெயரையுடையவர் இருவர்; அவருள், ஒருவன் மணிமேகலையின் தந்தை; கண்ணகியின் கணவன்; சிலப்பதிகாரக் கதாநாயகன் ; மற்றொருவன் மேற்கூறிய கோவலனுக்கு ஒன்பது தலைமுறை முன்னோன்.
கோறல் - கொல்லுதல், 54.
கௌசிகர்-விசுவாமித்திரர், 36.
கௌசிகன் : சண்பை நகரத்துள்ள ஓரந்தணன்.
சக்கரவாளக்கோட்டம் : புத்திர சோகத்தால் வருந்திய கோதமையின் துன்பத்தைப் போக்குவதற்காக இவ் வுலகத்திலுள்ள எல்லாத் தேவர்களையும் சம்பாதி வருவித்துக் காட்டிய விடத்தில் அக்காட்சியை எக்காலத்தும் யாவரும் காணும் வண்ணம் மயனால் நிருமிக்கப்பட்டது ; இது காவிரிப்பூம் பட்டினத்துள்ளது ; இதன்பால் முனிவர் பலரிருந்து தவஞ்செய்தனர்.
சங்கதருமர் : ஒரு பௌத்த முனிவர்; சுதமதிக்கும், அவள் தந்தைக்கும் தருமோபதேசம் செய்தவர்.
சங்கமன் : ஒரு வணிகன் ; நீலியின் கணவன்.
சங்கமுகத்துறை : காவிரி கடலோடு கலக்கு மிடத்துள்ள துறை, 13.
சண்பை : கடலோரத்துள்ள ஒரு நகரம்.
சதுக்கப்பூதம் - நாலு தெருக்கள் கூடுமிடத்து உள்ள தெய்வமாகிய பூதம், 2.
சந்திரதத்தன்: கப்பலிற் சென்று வாணிகஞ்செய்தவொருவணிகன்.
சம்பாதி - கழுகுகளுக்கு அரசான ஒரு பட்சி, 6.
சம்பாதிவனம்-காவிரிப்பூம்பட்டினத்தைச் சார்ந்த ஒரு சோலை.
சம்பாபதி : சம்புத்தீவின் அதிதேவதை ; இது சிவந்த நிறமும் சடையும் உடையது, [20.
சம்புத் தீவு, 102.
சமணப்பள்ளி, 14.
சமந்தம்-சமந்தகூட மென்னும் மலை ; இலங்கையி லுள்ளது ; இதன் உச்சியில் புத்தருடைய பாதப்படிமைப் பீடமுண்டு.
சமனொளி - சமந்தகூடம், 100.
சனமித்திரன் -புண்ணிய ராசனுடைய மந்திரிகளுள் ஒருவன்.
சாது சக்கரன் : ஒரு முனிவன்; ஆகாயகமன முடையவன் ; தன் முற்பிறப்பில் இவனை ஒருபொழுது உண்பித்த புண்ணியமே மணிமேகலை நல்வழிப் படுதற்கு ஏதுவாயிற்று.
சாதுவன் : ஆதிரையின் கணவன் ; நாகர்களுக்கும் அவர்கள் குருமகனுக்கும் சில நீதிகள் கூறி அவர்களை நல்வழிப்படுத்தியவன்.
சாப்பறை - பிணப்பறை, 18.
சார்ங்கலன் : கோதமையின் புதல்வன்; இவன் மயானத்

தில் ஒரு பேய்மகள் ஆடியதைக் கண்டு அஞ்சி உயிரை இழந்தவன்.
சாரணமுனிவன் - ஆகாயகமன முதலிய சித்தியுள்ளவன், 30.
சால்பு : அமைதி, 69.
சாலி : ஒரு பார்ப்பனி; அபஞ்சிகன் மனைவி; ஆபுத்திரனுடைய தாய்.
சாவகம் : ஆபுத்திரனுடைய நாடு; இதன் தலைநகர் நாகபுரம்; இதில் தவள மலையென்று பெயர் பெற்ற ஒரு மலை யுண்டு.
சாளரம் - பல்கணி, 9
சிங்கபுரம்: கலிங்க நாட்டிலுள்ள ஒரு நகரம். [நகர்.
சித்திபுரம் : சீதரராசனுடைய
சித்திராபதி : மாதவியின் நற்றாய்; மணிமேகலையை உதயகுமாரனோடு கூட்டுதற்குப் பலவகையாக முயன்றவள்; மிக்க தந்திரமுள்ளவள்.
சிதைத்தல் - அழித்தல், 56.
சிந்தாதேவி - ஸரஸ்வதி தேவி; தென்மதுரையில் இவளுக்குக் கலாநிலயமென்று பெயர் பெற்ற ஆலயமொன்று இருந்தது.
சிருங்கி - மான்வயிற்றிற் பிறந்த ஒரு முனிவர்; கலைக்கோட்டு மாமுனி.
சிறைக் கோட்டம் - சிறைச்சாலை, 61.
சீதரன் - சித்திபுரத்து அரசன்; நீலபதியின் தந்தை.
சீர்த்தி : மாவலி பரம்பரையிலுதித்த ஓரரசன் புத்திரி; நெடுமுடிக் கிள்ளியின் மனைவி; உதயகுமரனுடைய தாய்.
சீவர ஆடை - பௌத்த முனிவர்கள் அணியும் மஞ்சள் நிறமான ஆடை, 14.
சுதமதி : கௌசிகனென்னும் அந்தணனுடைய புத்திரி; மாதவியின் உயிர்த்தோழி; மணிமேகலைபால் மிக்க அன்புடையவள்.
சுரை - உட்குழிவு, 55.
சூல் - கருப்பம், 42.
செங்குட்டுவன் : சேரலாதன் புத்திரன்; இளங்கோ வடிகளின் தமையன்.
செவ்வி - சமயம், 14. [11, 85.
செற்றம் - தணியாக் கோபம்,
செறுத்தல் - அடக்குதல், 85.
சேக்கை - தங்குமிடம், 11.
சைத்தியம் - கோயில், 101.
சோழன் கரிகாற் பெருவளத்தான் : காவிரிப்பூம் பட்டினத்தை ஆண்ட ஓர் அரசன்.
சோழிக வேனாதி - சோழனுடைய சேனாதிபதி, 80.
ஞாயிறு - சூரியன், 40.
தருமசாவகன் : ஒரு பௌத்த முனிவன்; புண்ணிய ராசனுக்குத் தருமோபதேசம் செய்தவன்.
தருமதத்தன் : காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஒரு வணிகன்; மரிக்கும்வரையிற் கலியாணமின்றி யிருந்தவன்.
தருமதவனம் : காஞ்சி நகரத்திலுள்ள ஒரு சோலை.
தரும பீடிகை, 34.
தவலா-கெடாத, 11. [ஒருமலை.
தவள மலை: சாவகநாட்டிலுள்ள
தாபதக்கோலம்- தவவேடம், 59.
தாரை : இரவிவன்மன்புத்திரி; துச்சயராசன் மனைவி;

வீரை, இலக்குமி யென்பவர்
களின் தமக்கை.
தாழ்த்தல்- தாமதித்தல், 70, 78.
திட்டிவிடம் - கண்ணில் விட
முடையதொருபாம்பு; இஃது
அழற்கணாகம், நஞ்சுவிழியர
வெனவும் வழங்கும்.
திலோத்தமை, 45.
தீர்த்தன் - பரிசுத்தன், 16.
தீவதிலகை: மணிபல்லவத்
துள்ளபுத்தபீடிகையைஇந்தி
ரன் கட்டளைப்படி பாதுகாக்
கும் ஒரு தெய்வமங்கை; புண்
ணியராசனுடைய பூர்வசன்ம
சரீரம் மணலிற் புதைந்து
கிடந்ததை அவனுக்குக் காட்
துகில் - ஆடை, 54. [டியவள்.
துச்சயன்: கச்சய நகரத்து அர
சன்; தாரை, வீரை என்பவர்
களின் கணவன்.
துடி - உடுக்கை, 1.
துடிதலோகம் : துஷிதலோக
மெனவழங்கும்; உலகம் முப்
பத்தொன்றனுள் ஒன்பதா
வது; மஹா ராஜிகலோக
முதலிய தெய்வலோகம் ஆற
னுள் நான்காவது; இதி
லுள்ள பிரபாபாலனென்னும்
தேவனே புத்தனாக அவதரித்
தானென்பர்.
துணையிளங்கிள்ளி : காஞ்சி நக
ரத்திலிருந்த ஒரு சோழன்.
துய்த்தல் - அனுபவித்தல், 40.
துர்க்கை, 67,74.
துவதிகன்: ஒரு தேவன்; சித்திர
சேனனுக்கு நண்பன்; காவி
ரிப்பூம்பட்டினத்திலிருந்த கந்
திற் பாவையை அதிட்டித்
திருந்து முக்காலச் செய்தி
யையும் கூறி வந்தவன்.

துறக்கம் - தேவலோகம், 35.
தூங்கெயி லெறிந்த தொடித்
தோட்செம்பியன் : அசைந்து
கொண்டிருந்த மூன்றுமதில்
களை அழித்து வீரவளையை
யணிந்த தோளையுடைய சோ
ழன்; காவிரிப்பூம் பட்டினத்
தில் அகத்தியமுனிவருடைய
கட்டளையின்படி முதலில் இந்
திரவிழாவை எடுப்பித்தவன்.
தூசு - ஆடை, 66.
தென்மதுரை, 77.
தொடுகழற்கிள்ளி: காஞ்சி நக
ரத்திருந்த ஒரு சோழன்;
துணையிளங்கிள்ளியின் தமை
நஞ்சுவிழியரவு, 84 [யன்.
நயன் - செல்வம், 59.
நலியாது - வருத்தாது, 80.
நறுந்தாது - நல்ல தேன், 59.
நன்காடு - சுடுகாடு, 17.
நாகபுரம்: புண்ணிய ராசனு
டைய இராசதானி.
நாகர் - ஒருவகை மனிதர்.
நாகர் மலை, 53. [36.
நாணணி - நாணாகிய ஆபரணம்,
நாத்தொலைவு - நாவின்
மெலிவு, 89.
நால்வகை வாய்மை - துக்கம்,
துக்க நிவாரணம், துக்கோற்
பத்தி, துக்க நிவாரணமார்க்க
மென்னும் சத்தியங்கள்
நாவற்கனி, 56. [நான்கு, 4.
நாவாய் - கப்பல், 93. [தெரு, 2.
நாளங்காடி - காலைக் கடைத்
நாற்றுதல் - தொங்கவிடுதல், 2.
நிமித்தம் - சகுனம், 50.
நிருமித்தல்-உண்டாக்குதல், 22.
நிருவாணம் - முத்தி.
நின்னுங் கொழியாது - நின்னை
ஒழியாது, 31.

நீலபதி - சீதரனென்னும் அரசன் புத்திரி; அத்திபதியின் மனைவி; இராகுலன் தாய்.
நீலி, 96.
நெடுஞ்செழியன் : ஒரு பாண்டியன்; சிலம்பு காரணமாகக் கோவலனைக்கொல்வித்தவன்.
நெடுமுடிக்கிள்ளி: ஒரு சோழன்.
பகவன் - புத்ததேவன், 7.
பஞ்சசீலம்-காமம், கொலை, கள், பொய், களவு என்னும் ஐந்தையும் முற்றத்துறத்தல், 4.
படிமம் - தெய்வவடிவம், 71.
படிமை - வடிவம், 34.
பத்தினிக்கடவுள் - பதிவிரதையாகிய தெய்வம், 4.
பதுமபீடம் - புத்ததேவருடைய பாதவடிவங்கள் வைத்துப் பூசிக்கப்படும் ஆசனம், 7.
பரசுராமர் : திருமாலின் அவதார மூர்த்திகளுள் ஒருவர்.
பரதன் : சிங்கபுரத்தரசனாகிய வசு என்பவனுடைய வேலைக்காரன்.
பவம் - பிறவி, 72.
பழிமொழி-நிந்தைவார்த்தை, 3.
பளிக்கறை - பளிங்காலாகிய அறை, 9.
பளிக்குமண்டபம் - பளிங்கு மண்டபம், 7.
பாசம் - கயிறு, 6. [61.
பாடு கிடத்தல் - வரம்கிடத்தல்,
பாணன் - யாழ்வாசிப்போன்,
பாணித்து - தாமதித்து, 70.[59.
பாதபங்கயமலை:மகத நாட்டின் இராசதானியாயிருந்த இராஜகிருக நகரத்தினருகிலுள்ள ஒருமலை; புத்தர் எல்லா உயிர்களுக்கும் இதன்மேல் நின்று தருமோபதேசஞ் செய்த பொழுது அவர் பாதச்சுவடு தங்கப்பெற்றமையின் இஃது இப்பெயர் பெற்றது; இது கிருத்திர கூடமென்றும் கூறப்படும்.
பாவை விளக்கு - பிரதிமைகள் தாங்கும் தீபம், 2.
பிக்குணிகள் : பிக்ஷுணிகள்; துறந்தோரிற்பெண்பாலோர்,
பிணவு-பெண்கரடி, 53. [51.
பிரச்சோதனன், 51.
பிரதானி - அரசனுடைய உத்தியோகஸ்தர்களுள் முதல்வன், 91.
பிரமதருமன் : ஒரு பௌத்த முனிவன்; அத்திபதியின் மைத்துனன்.
பிறக்கு - பின்னே, 35.
பீடிகை - பீடம், 26.
பீலிவளை : வளைவணனென்னும் அரசனுடைய மகன்.
புண்ணியராசன் : நாகபுரத்தரசன்.
புணை - தெப்பம், 36.
புத்தசைத்தியம்-புத்தாலயம்,97.
புத்தேளுலகம் - தெய்வலோகம், 78.
புழுக்கறை - புழுங்குதற்குக்காரணமான அறை, 83.
புற்றளை - புற்றின் துவாரம், 67.
புறமறிப்பார்த்தல் - உடம்பின் வெளிப்பக்கத்தை உட்புறமாகவும், உட்புறத்தை வெளிப்புறமாகவும் பார்த்தல், 11.
பூட்கை - கொள்கை, 7.
பூதசதுக்கம் : தவவேடத்தில் மறைந்து தீமைபுரிந்தொழுகுவோர் முதலிய பாவியரைப் புடைத்து உண்ணும் பூதம் நிற்கும் நாற்சந்தி.
பூதி : ஆபுத்திரனை வளர்த்தவன்.

பூமிசந்திரன் : புண்ணியராசனை வளர்த்தவன். [நாடு.
பூருவதேசம் : அத்திபதியின்
பெண்டு - மனைவி, 53.
பேடு - புறக்கூத்துப் பதினொன்றனுள் ஒன்று ; உஷை காரணமாக வாணாசுரனால் சிறைவைக்கப்பட்ட தன் மகன் அநிருத்தனைச் சிறை மீட்டுப் பேடிவடிவங் கொண்டு காமன் சோநகரத்தில் ஆடிய ஆடல், 8.
பேணுமாக்கள் - பாதுகாக்கப் படாதவர் ; கதியற்றவர்கள், [104
பேணி - விரும்பி, 89.
பைதல் - துன்பம், 58.
போதியில் : பாண்டி நாட்டில் உள்ள ஒரு மலை.
பொய்கை - குளம்; மானிடராக் காத நீர்நிலை யென்பர், 9.
பொய்யில் புலவன் - திருவள்ளுவர், 76. [76.
பொருளுரை - தருமவார்த்தை,
போதி மூலம் - அரசமரத்தின் அடி, 40.
போனகம் - உணவு, 104.
மகதம் : ஒரு நாடு.
மடி - ஆடை, சோம்பல், 104.
மடையன்-சமையற்காரன், 70.
மண்டை - பாண்டவிசேடம், வாணாய், 19.
மண்முகன்: தவளமலையிலிருந்து தவஞ்செய்த ஒரு முனிவன் ; இம்முனிவனிடத்திருந்த பசு வயிற்றிலேதான் புண்ணிய ராசன் பிறந்தான்.
மணிபல்லவம் : காவிரிப்பூம் பட்டினத்திற்குத் தெற்கே முப்பது யோசனை யளவி லுள்ள ஒரு சிறு தீவு.
மணிமேகலாதெய்வம் : சில தீவிலுள்ளவரை அரக்கர் வாதை பண்ணாதபடி இந்திரன் ஏவலால் பாதுகாத்த ஒரு தெய்வம் ; கோவலனுடைய குலத்தோனொருவனை இத் தெய்வம் கடலில் பாதுகாத்த நன்றிபாராட்டி அவன் தன் காதற் பரத்தையின் புதல்விக்கு மணிமேகலை யென்று பெயரிட்டான்.
மணிமேகலை : கோவலனுக்கு மாதவிபாற் பிறந்தவள் ; இக் கதைத் தலைவி.
மதுராபதி : தென்மதுரையின் அதிதேவதை.
மயன், 8.
மருதி : காவிரிப்பூம் பட்டினத் துள்ள ஒரு பார்ப்பனி.
மறம் - பாவம், 69.
மாசாத்துவான் : கோவலன் தந்தை
மாதவி : ஒரு நாடகக் கணிகை ; கோவலனுடைய காதற் பரத்தையாயிருந்து மணிமேகலையைப் பெற்றவள் ; கோவலன் கொலையுண்டதைக் கேட்டுத் துறந்து அறவணவடிகள்பால் தருமங் கேட்டு அவருடன் காஞ்சி சென்று நோற்றிருந் தவள்.
மாரன் - தருமவிரோதிகளான இச்சைகளை மனத்திலுண் டாக்கும் ஒரு தேவன். [ரன்.
மாருதவேகன் : ஒரு வித்தியாத
மாவண்கிள்ளி - ஒரு சோழன்.
மிச்சில் - மிகுதி, 50.
மிருத சஞ்சீவினி [illegible] உயிரை மீட்டும உடம்பிற் சேர்க்கும் பச்சிலை, 68.

மீகாமன் - மாலுமி, 48.
முசுகுந்தன் : சூரிய குலத்திற் பிறந்த ஒரு சக்கரவர்த்தி.
முடைநாற்றம்-புலால் நாற்றம்,
முதுக்குறைவு-பேரறிவு, 11. [53
முதுமொழி - பழைய வார்த்தை,
முறுகிய - மிகுந்த, 80. [64.
மூவறு பாடை - பதினெட்டுப் பாஷை, 104.
மெல்வளை - மெல்லிய வளையை யுடையவள், 26.
யாழ் - வீணை, 9.
யானைத்தீ - பஸ்மகவியாதி, 56.
யௌகந்தராயணன், 51.
வச்சிரக்கோட்டம் : வச்சிராயுதம் நிற்கும் கோவில்; இது காவிரிப்பூம்பட்டினத்திலிருந்
வசு : சிங்கபுரத்தரசன். [தது.
வஞ்சி : சேரராசதானி.
வஞ்சினம் - சபதம், 61.
வயந்தமாலை: மாதவியின் தோழி. [டுள்ள ஒரூர்.
வயனங்கோடு : பாண்டி நாட்
வழிப்படூஉம் - பெருகும், 55.
வளி - காற்று, 40.
வளைவணன் : நாகநாட்டரசன்; வாசமயிலையின் கணவன்; பீலிவளையின் தந்தை.
வறம் - வறுமை, 103.
வாசந்தவை : ஒரு முதியவள்; சோழன் மனைவி முதலியவர்களுக்குப் பல நீதிமொழிகளைக் கூறியவள்.
வாசமயிலை : வளைவணன் மனைவி; பீலிவளையின் தாய்.
வாரணாசி - காசி.
விசாகை : ஒரு வணிகமாது; மரணபரியந்தம் விவாகமின்றிக் கன்னிமாடத்தே யிருந்து காலங் கழித்தவள்.
விடுநிலம் - பசுமுதலியன மேய்தற்கு விடப்பட்ட நிலம், 43.
விண்மீன் - நக்ஷத்திரம், 21.
விந்தம் : ஒருமலை.
விந்தாகடிகை : ஒரு தெய்வப் பெண்; விந்தமலையில் துர்க்கையின் கோயிலைக் காப்பவள்.
விராட நகரம், 8.
விரிஞ்சி : புலிவயிற்றிற் பிறந்த ஒரு முனிவன்.
விருச்சிகன் : பொதியின் மலைச் சாரலில் தவஞ்செய்துகொண்டிருந்த ஒரு முனிவன்; கஉ வருடத்திற்கு ஒரு முறை உண்ணும் பட்டினி விரதி.
விழா - உற்சவம், 1.
விழுத்துணை-சிறந்த துணை, 78.
விளிவு - இறத்தல், 11.
வீரை : இரவிவன்மன் புத்திரி; இலக்குமி, தாரை யென்பவர்களின் சகோதரி; துச்சயராசன் மனைவி.
வெய்துயிர்த்தல் - வெம்மையாக மூச்சுவிடல், 42.
வெரூஉப்பகை - அஞ்சுதற்குக் காரணமாக பகை, 40.
வேய் - மூங்கில், 58.
வைசாகசுத்தபூர்ணிமை, 34, 50.
வைவாள் - கூரிய வாள், 26.



Printed at the Kesari Printing Works, Mount Road, Madras.